# ஆபிரகாம் பண்டிதர்

பேராசிரியர்
தனபாண்டியன்

படையல்

—

எனது அன்புமிகு தந்தையார்

காலஞ்சென்ற பெ. துரைப்பாண்டியன்

அவர்கள் நினைவாக

இந்நூலைப் படைக்கிறேன்.



ராவ்சாஹேப்

**மு. ஆபிரகாம் பண்டிதர்**

# முன்னுரை

தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும் இருபதாம் நூற்றுண்டின் முற்பகுதியிலும் சித்த மருத்துவத் துறையிலும் இசைத்தமிழ் ஆய்வுத் துறையிலும் ஒப்பற்ற தொண்டு புரிந்து அழியாப் புகழ் பெற்றுர். சித்த மருத்துவ முறையில் பல மருந்துகளைக் கண்டுபிடித்து மக்களின் பிணி தீர்க்கும் பணியில் ஈடுபட்டார். இசைத் தமிழ்பற்றிப் பல ஆண்டுகள் தீவிர ஆராய்ச்சி செய்து பழந்தமிழ் மக்களின் இசைத்திறனையும் சிறப்பையும் அனைவருக்கும் அறிவிக்கும் வண்ணம் ''கருணாமிர்த சாகரம்- முதல் புத்தகம்''- கருணாமிர்த சாகரம்- இரண்டாம் புத்தகம்'' என்னும் இருபெரும் ஆய்வு நூற்களை இசை உலகிற்கு அளித்துள்ளார். வேளாண்மைத் துறையிலும் அவர் பல சிறந்த சாதனைகளைப் புரிந்துள்ளார்.

பல்வேறு துறைகளில் அவர் புரிந்துள்ள சீரிய பணிகளை இன்றைய தலைமுறையினர் அறிந்து கொள்ளுவது இன்றியமையாததாகும். இசைத்தமிழ், சித்த மருத்துவம் ஆகிய துறைகளில் அவர் ஆற்றியுள்ள சீரிய தொண்டுகள், இத்துறைகளில் எதிர்காலத்தில் நாம் மேற்கொள்ளப்பட வேண்டிய ஆய்வுப்பணிகளுக்கு உதவும். இம் முறையில் இந்தச் சிறிய நூல் நல்ல பயனை அளிக்கும் என நம்புகிறேன்.

ஆபிரகாம் பண்டிதரின் மூத்த குமாரரின் குமாரரான காலஞ்சென்ற டாக்டர் ஏ. எஸ். தவப்பாண்டியன் அவர்கள் 1968ம் ஆண்டு எழுதி வெளியிட்ட ''தமிழன்பன் -ஆபிரகாம்'' என்னும் சிறிய நூலில் கொடுக்கப்பட்டுள்ள குறிப்புக்களைப் பயன்படுத்தி இந்நூலை எழுதியிருக்கிறேன். போதிய நேரம் கிடைக்காததால் இந்நூலை விரிவாக எழுத இயலவில்லை. அடுத்த பதிப்பில் இந்நூலை இன்னும் விரிவாக எழுத நினைத்திருக்கிறேன்.

இந்நூலின் நடையை அழகுபடுத்தியும், ஆங்காங்கே பல குறிப்புக்களைச் சேர்த்தும் உதவிய என் மகள் திருமதி மல்லிகா துரைப்பாண்டியனுக்கு என் நன்றி உரியதாகும்.

இந்நூலை இலவசமாக அச்சிட்டுச் சிறந்த முறையில் வெளியிட்டுள்ள எனது மருமகன் திரு டி. ஏ. ஜி. துரைபாண்டியனுக்கு நான் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலைத் திருத்தியும் அச்சுப்பிழைப் பார்த்தும் உதவிய எனது நண்பர், நல்லாசிரியர், புலவர். வேல் சம்பந்தமூர்த்தி அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பண்டிதர் அவர்களின் வாழ்க்கையைச் சித்திரிக்கும் இந்நூலை நான் எழுத முற்பட்டுள்ளேன் எனத் தெரிவித்த போது தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மாண்புமிகு டாக்டர் வ. அய்.

சுப்பிரமணியம் அவர்கள் என்னை ஊக்குவித்தார்கள். பல புதிய இராகங்களைக் கண்டுபிடித்து, பண்டிதர் கண்டுபிடித்த இராகபுட முறையைப் பின்பற்றி, இந்தப் புதிய இராகங்களில் பல பாடல்களுக்கு இசை அமைக்கும் வாய்ப்பைத் தமிழ்ப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் அவர்கள் எனக்கு அளித்துள்ளார்கள். அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் சுவிசேட லூத்தரன் திருச்சபையின் பேராயர் பேரருட் பெருந்தகை ஜெயசீலன் ஜேகப் அவர்கள், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழக இலக்கியத்துறையின் தலைவர் பேராசிரியர் க. வெள்ளை வாரணனார் அவர்கள், தமிழ்நாடு அரசு இந்திய மருத்துவத் துறையின் முன்னாள் இயக்குநர் டாக்டர் சி. எஸ். உத்தமராயன் அவர்கள், தமிழ் நாடு அரசு சித்த மருத்துவ அபிவிருத்திக் குழுவின் முன்னாள் தலைவர் டாக்டர் ஆர். தியாகராஜன் அவர்கள், பாளையங்கோட்டை புனித சவேரியார் கல்லூரி தமிழ்த்துறைப் பேராசிரியர் டாக்டர் வி. மா. ஞானப்பிரகாசம் அவர்கள், கரந்தைத் தமிழ்ச் சங்கப் புலவர் கல்லூரி முன்னுள் துணை முதல்வர் பாவலரேறு பாலசுந்தரம் அவர்கள், கலைமா மணி இசைப் பேரரசி டாக்டர் சேலம் எஸ். ஜெயலட்சுமி அவர்கள், மதுரையிலுள்ள தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரியின் முதல்வர் பேரா சிரியர் கோ. சண்முகசுந்தரம்அவர்கள், மதுரை ஸ்ரீ சத்குரு சங்கீத வித்யாலயத்தின் முதல்வர் டாக்டர் வி. பிரேமலதா அவர்கள், மதுரைப் பல்கலைக் கழக இசைத்துறை ஆய்வுப் பேராசிரியர் டாக்டர் வீ. ப. கா. சுந்தரம் அவர்கள், சென்னை கிறிஸ்தவ இலக்கியச் சங்கத்தின் பொதுச் செயலாளர் டாக்டர் தி. தயானந்தன் பிரான்சிஸ் அவர்கள், பாண்டிச் சேரி அகில இந்திய ரேடியோ நிலைய இசை அமைப்பாளர் திரு பி எம். சுந்தரம் அவர்கள், தமிழ்ப் பல்கலைக்கழக மொழி பெயர்ப்புத்துறைத் தலைவர் மா. சண்முக சுப்ரமணியன் அவர்கள் ஆகியோர், அன்பு கூர்ந்து இந்நூலிற்கு அணிந்துரை வழங்கியுள்ளனர். அவர்கள் அனைவருக்கும் என் உளம் நிறைந்த நன்றி உரியதாகும்.

ஆபிரகாம் பண்டிதர் பிறந்து இன்றைக்கு நூற்று இருபத்து ஐந்து ஆண்டுகள் ஆகின்றன. அவரது நூற்று இருபத்தைந்தாவது ஆண்டைக் குறிக்கும் வகையில் இந்நூல் இவ்வாண்டு வெளிவர அருள் புரிந்த எல்லாம் வல்ல இறைவன் இயேசு பெருமானை என் உளமாரப் போற்றி வணங்குகிறேன்.

**து. ஆ. தனபாண்டியன்.**
*இசைத்துறைத்தலைவர்,*
*தமிழ்ப்பல்கலைக்கழகம்,*
*தஞ்சாவூர்.*
2—8—84

பேரருட் பெருந்தகை
ஜெயசீலன் ஜேகப்
தரங்கைப் பேராயர்

திருச்சிராப்பள்ளி
6—3—84

# ஆசியுரை

பேராசிரியர் D. A. தனபாண்டியன் அவர்கள் எழுதி வெளியிட்டுள்ள **"தஞ்சை ஆபிரகாம் பண்டிதர்"** என்ற நூலினைப் படித்துப் பெருமகிழ்வெய்துகிறோம். தமிழ்க்கிருத்தவ வரலாற்று ஏட்டில் சிறப்பிடம் பெறுகின்ற ஆபிரகாம் பண்டிதரின் வாழ்க்கை வரலாறு, தகுந்த நேரத்தில் வெளியிடப்படுவது வரவேற்க வேண்டிய தொன்றாகும்.

நற்செய்தித் தொண்டர் ஆபிரகாம் பண்டிதரின் வாழ்க்கையை ஒரு மரத்திற்கு உவமித்தால் அதன் கிளைகளை அவரது பண்புகள் அணி செய்கின்றன. அவையாவன மருத்துவத்துறை, நற்செய்திப்பணி, புகைப்படத்திறன், ஆசிரியர் திறன், அச்சுத்தொழில், இசைத்துறை முதலியன ஆகும். இக்கிளைகளைத் தன்னகத்தே கொண்ட பண்டிதரின் பக்தி வாழ்வுமரம், இயேசு கிறிஸ்துவின் மீது அவர் கொண்ட விசுவாச வேர்களிட்டு நம்பிக்கை விழுதுகளிட்டு இன்றும் வளர்ந்தோங்கி நிற்பது கண்டு மகிழ்கிறோம்.

மார்ட்டின் லூத்தர் கிறிஸ்தவனது வாழ்வை ஒரு பறவைக்கு உவமித்து, பறவையின் இரு சிறகுகளாக ஒன்று அருளுரைப் பணியும் இரண்டாவது இசைப்பணியும் ஆகும் என்றார். அவ்வாறே இசைப் புலவர் ஆபிரகாம் பண்டிதரின் இசைப்பணி, மக்கள் பலர் இயேசுவை ஏற்கக் கருவியாய்த் திகழ்ந்தது.

பேராசிரியர் தனபாண்டியன் அவர்கள் இந்நூலை மிகவும் சுவை மிகுந்த விருந்தாகப் படைத்துள்ளார்கள். பண்டிதரின் வரலாற்றை எழுத உரிமையும், தகுதியும் திறமையும் பேராசிரியர் தனபாண்டியனுக்கே உரியது. பக்திச்சுவை, பொருட்சுவை, இசைச்சுவை; நற்செய்திப்பணிச் சுவை, இசை ஆராய்ச்சிச் சுவை முதலியவற்றைத் தேனுடன் பால் கலந்து கொடுத்தாற்போல் அளித்திருக்கின்றார்.

இந்நூலாசிரியரே இசைப்பாவலராக இருப்பதால் **"இனிய இசைத் தமிழ்"** என்ற அதிகாரத்தில் (பக்கம் 20) பண்டிதர் எழுதிய பாடல்களுக்கு "ஸ்வரம்" அமைத்துத் தந்துள்ளது இந்நூலிற்குச் சிறப்பு அழகாகும். திருமணங்களில் தவறாது ஒலித்திடும்

"**மங்களம் செழிக்கக் கிருபையருளும் மங்கள நாதனே...**" என்ற பாடலும் கிறிஸ்மஸ் காலங்களில் ஆலயங்களிலும் இல்லங்களிலும் ஒலிக்கும் "**கண்டேன் என் கண் குளிர...**" என்ற (சிமியோனின் துதி) பாடலும் பண்டிதர் இயற்றிய பாக்கள் என்ற செய்தியைப் பேராசிரியர் தனபாண்டியன் அனைவருக்கும் அறிவித்துள்ளது மகிழ்வுக்குரிய செய்தியாகும்.

ஆபிரகாமை அழைத்த ஆண்டவரே ஆபிரகாம் பண்டிதரையும் பேர் சொல்லி அழைத்தார். அவரே நம்மையும் அழைத்துள்ளார்.

அவர் திருப்பெயர் போற்றுவோம். புகழ் சாற்றுவோம். பேராசிரியர் தனபாண்டியன் இப்பணி ஏற்றமைக்கு அவருக்கு எமது பாராட்டுதல்களைக் கூறுவோம்.

பரன் பிறன் பணி புரிவோம் அல்லேலூயா
பணிவான பணி புரிவோம் அல்லேலூயா
துணிவான பணி புரிவோம் அல்லேலூயா
துதிபாடும் பணி புரிவோம் ஆமேன் ஆமேன்.

**ஜெயசீலன் ஜேகப்**



திருமுறையாராய்ச்சிக் கலைஞர்
பேராசிரியர் க. வெள்ளை வாரணனார்
இலக்கியத்துறைத் தலைவர்
தமிழ்ப்பல்கலைக்கழகம்

தஞ்சை.
நாள் 13—4—84

# அணிந்துரை

பண்டைத் தமிழ் மக்கள் வளர்த்த சித்த மருத்துவம் தமிழிசை முதலிய கலைகளை வளர்த்தலே தமது வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்த செந்தமிழ்ச் சான்றோர் தஞ்சை ஆபிரகாம்பண்டிதர் என்பதனைத் தமிழகம் நன்குணரும்.

தண்ணார் தமிழளிக்கும் தென்பாண்டியிலே தோன்றித் தமிழும் ஆங்கிலமும் பயின்று ஆசிரியப் பயிற்சி பெற்று மாணாக்கர்க்குக் கற்பிக்கும் கடமையினை மேற்கொண்ட அறிஞர் ஆபிரகாம் அவர்கள் நோயால் நலியும் மக்களது துயர் துடைக்கும் நோக்குடன் சித்த மருத்துவம் வல்லாரை நாடிப் பல உண்மைகளைத் தேடித்தொகுத்தார். சுருளிமலையில் வாழ்ந்த கருணானந்த முனிவரை அடைந்து அவர் அறிவுறுத்திய முறையில் சிறந்த மருந்துகளைச் செய்யும் முறையில் தேர்ந்து செய்து, குழந்தை முதல் முதியோர் வரை நோய் நீங்கி வாழ்வு பெற வழிகண்டார். தஞ்சையில் கருணானந்த வைத்தியசாலையை நிறுவிச் சித்த மருத்துவ முறையில் மருந்துகள் பல செய்து வளம் பெற்றார். பழந்தமிழ் இசையாராய்ச்சியில் ஈடுபட்டு இசைத்துறையில் நுண்ணிய சுருதிகள் பலவற்றை ஆராய்ந்தறிந்தார்.

இந்திய நாட்டின் இசையறிஞர்களை ஒருங்கு கூட்டி இசை மாநாடுகள் பல நிகழ்த்தினார். இசையிலும் மருத்துவத்திலும் தம் முடைய மக்களை ஈடுபடுத்தினார். இவர் ஆராய்ந்து கண்ட இசைத் தமிழ் நுட்பங்களும் இசைக்கலை பற்றிய விளக்கங்களும் கருணாமிருத சாகரம் என்ற பெயரால் இரண்டு தொகுதிகளாக வெளியிடப் பெற்றுள்ளன. இந்நூல்கள் இசை பயில்வார்க்கும் வீணை முதலிய இசைக் கருவிகளை இயக்குவார்க்கும் இசையில் பல்வேறு திறங்களை ஆராய்ந்து காண்பார்க்கும் பயன்படு முறையில் இசைக்கலைக் களஞ்சியமாகத் திகழ்கின்றன.

இராவ்சாகிபு ஆபிரகாம் பண்டிதரவர்கள் நாட்டு மக்களது நல் வாழ்வுக்கு உறுதுணை செய்வன நல்லொழுக்கமும் தெய்வ நம்பிக்கை யுமேயெனத் தெளிந்து அருமறையாராய்ச்சியில் ஈடுபட்டு கிறிஸ்தவ

சமயவுண்மைகளைப் பலரும் உணர்ந்து போற்றும் முறையில் 'நன்மறை காட்டும் நன்னெறி' என்ற சமய நூலையும் இயற்றியுள்ளார்.

இவ்வாறு இயலிசைத் திறமும் மருத்துவப் புலமையும் மருந்து செய்து பிணி தீர்க்கும் பெற்றியும் ஒருங்கு கைவரப் பெற்றுத்தாம் மட்டுமன்றித் தம்முடைய குடும்பத்தாரையும் வழிவழி இத் துறையில் ஈடுபடுத்தி வாழ்வாங்கு வாழ்ந்து தெய்வத் திருவருளுக்குரியராகிய செந்தமிழ்ப் பெருந்தகையார் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவர்களது வாழ்க்கை வரலாறு தமிழ்மக்களுக்குக் கலைத்துறையிலும் பொதுநலப் பணியிலும் ஊக்கமும் ஆக்கமும் நல்குவதாகும். இவ்வுண்மையினை நன்குணர்ந்த இராவ்சாகிபு பண்டிதரவர்களது மகள் வழிப் பேரனும் தஞ்சை தமிழ்ப்பல்கலைக் கழக இசைத்துறைப் பேராசிரியரும் ஆகிய டி. ஏ. தனபாண்டியன் அவர்கள் ஆபிரகாம் பண்டிதரவர்களது வாழ்க்கை வரலாற்றினை இனிய செந்தமிழ் நடையில் தெளிவும் சுருக்கமும் பொருந்த எழுதியுள்ளார். இந்நூல் உருவிற் சிறியதாயினும் பொருட் செறிவுடையதாகும். பண்டைத் தமிழர் கலைச் செல்வங் களாகிய சித்த மருத்துவத்திற்கும் தமிழிசைக்கும் ஆக்கந்தரும் அரும் பொருள்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இந்நூலாசிரியர் தமிழுக்கும், இசைக்கலைக்கும் ஆக்கமளிக்கும் ஆய்வுநூல்கள் பலவியற்றி நாடும் மொழியும் வளம் பெற நீடு வாழ உளமுவந்து வாழ்த்துகிறேன்

இங்ஙனம்
க. வெள்ளைவாரணன்



**Dr. C. S. Uthamaroyan, H. P. I M.**
*Director of Indian Medicine, govt. of Tamil Nadu (Retd)*
*Principal, govt. college of Indian systems of Medicine (Retd)*
*Member, Central Council of Indian Medicine, govt. of India.*

## தஞ்சை ஆபிரகாம் பண்டிதரின் சித்த மருத்துவ அனுபவமும் ஆழ்ந்த ஆராய்ச்சியும்

பண்டிதர், ஆசிரியப்பயிற்சி-புகைப்படம் எடுக்கும் உயரியதன்மை-அச்சுக்கூடம் நவீன முறையில் அமைத்து நூற்களை நன் முறையில் அச்சியற்றல் - சோதிடப்பயிற்சி-சித்த மருத்துவத்துறையில் ஆய்வு - பயிர்த்தொழில்-மணந்தரும் பூச்செடிகளை வளர்த்தல்-இனிய கனிகளைத் தரும் மரங்களை வளர்த்தல். ஆகியவற்றில் பெரும் திறமை பெற்று விளங்கினர். இவை எல்லாவற்றையும் விட இசை ஆய்வுத்துறையில் அவர் புரிந்த பணி போற்றுதற்குரியது.

மேலும் தமிழ்ச்சங்க நூற்களிலிருந்து மேற்கோள்களைக் காட்டி இசைத்தமிழின் சிறப்பை எல்லோரும் அறிந்து கொள்ளும்படி இவர் செய்துள்ளார்.

ஆபிரகாம் பண்டிதர் திண்டுக்கல்லில் இருந்தபொழுது சித்த மருத்துவத்தில் தேர்ச்சி பெற்ற திரு. பொன்னம்பல நாடாரின் நட்பைப் பெற்றார். பொன்னம்பல நாடார் பண்டிதரைச் சுருளிமலைக்கு அழைத்துச் சென்றார். அங்குப்பண்டிதர், கருணானந்த மகரிஷியைச் சந்தித்தார்.

அன்று முதல் திரு. ஆபிரகாம் பண்டிதர் மருத்துவப்பணி செய்ய ஆரம்பித்தார். அவர் தயாரித்த மருந்துகட்குக் ''கருணானந்தர் சஞ்சீவி மருந்துகள்'' என்ற பெயரிட்டு மக்களுக்கு அளித்துவந்தார். இதனால் இவர் பெரும்புகழையும் பெற்றார் என்பதில் ஐயமில்லை.

இப்படி ஒரு தனி மனிதர் மேலே கூறிய பல துறைகளையும் நன்கு ஆய்ந்து அறிந்து புகழ்பெற்றார் என்றால் அது மனித சக்திக்கு அப்பாற்பட்டதெனின் மிகையாகாது. ஆதலின் அவர்களை ஒரு சித்தர் என்றே கூறலாம்.

தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் இயற்றிய '' கருணாமிர்த சாகரம் '' முதற்பகுதியையும் இரண்டாம் பகுதியையும் படித்து ஆராய்ந்தவர்கள், அவர்களின் ஆராய்ச்சித் திறனையும், மேம்பட்ட அறிவையும் புகழாமல் இருக்க முடியாது.

## இவர்களின் பின்ளைகள் செய்த பணிகள்

டாக்டர். ஆ. சுந்தரபாண்டியன், அவர்கள் தமது தந்தையைப் போலவே, சித்த மருத்துவத் துறையில் நீண்ட கால ஆராய்ச்சியின் பயனாகச் ''சூடச்சுண்ணம்'', ''கெந்தித்தைலம்'' என்பன போன்ற நெருப்புக்கு ஓடக்கூடிய சரக்குகளை நெருப்புக்கு ஓடவொட்டாமல் செய்து, அவற்றைப் பற்ப சுண்ணங்களாகச் செய்து நாட்பட்டத்தீரா நோய்கட்குக் கொடுத்து நோய்தீர்த்த பெருஞ்செயலே சித்தமருத்து வத்தின் மேன்மை, பெருமையை நன்கறிவிக்கும் என்பதை இவண் நோக்க வேண்டும்.

1933 ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் கடைசி வாரத்தில், சென்னை. சிந்தாதிரிப் பேட்டை உயர் நிலைப்பள்ளியில், காலஞ் சென்ற டாக்டர். டேவிட், சி. முத்து அவர்கள் (இளைப்புநோய் நிபுணர்) தலைமையில் சித்த வைத்திய மகாநாடு ஒன்று நடந்தது.

என் தகப்பனார் காலஞ்சென்ற வைத்தியரத்தினம் டாக்டர். க. ச. முருகேச முதலியார் (இந்திய மருத்துவப்பள்ளி, சித்த மருத்துவப் பகுதித் தலைவர்) அவர்கட்கும், பண்டிதர் ஆபிரகாமின் மகன் டாக்டர் ஜோதி பாண்டியன் அவர்கட்கும் அம்மாநாட்டில் ''சித்த வைத்திய சரபம்'' என்ற பட்டமளித்து மேன்மை படுத்தினார்கள்.

டாக்டர். ஜோதி பாண்டியனும் அவருடைய தகப்பனாரைப் போலவே, இசை, புகைப்படம் எடுத்தல், மருத்துவம் ஆகியவற்றிலும் புகழ்பெற்றிருந்தார்.

க. சு. உத்தமராயன்.



**Dr. R. THYGARAJAN, L. I. M.,**
*Member, Central Council of Indian Medicine, Govt. of India, New Delhi.*
*Hon. Consultant, Central Research Institute (Siddha) - Madras-29.*
*Ex-Chairman, Siddha Science Development Committee, Govt. of India, New Delhi*
*Ex-Chairman, Siddha Science Development Committee, Govt. of Tamil Nadu, Madras.*

## மதிப்புரை

தமிழர்களை வாழ்வித்த மொழி தமிழ்மொழி. அதில் உள்ள 64 கலைகளில் சித்த மருத்துவமும் ஒன்றாகும். இது தமிழர்களுடைய வாழ்க்கைக்கு ஏற்ற தகுதியுடைய கலையாகும். பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளில் அனுபவத்தின் அடிப்படையில் தோன்றி வளர்ந்து மக்களுக்குப் பயன்தந்து அழியாது நிலைபெற்ற விஞ்ஞானமாகும். நோய்வராது தடுக்கவும் வந்த நோயை நீக்கவும் நீடித்த ஆயுளை நல்கவும் வழிவகுத்ததே சித்த மருத்துவக்கலை. இக்கலை, பழங்காலந் தொட்டே தமிழ் நாட்டில் சீரும் சிறப்புடனும் விளங்கி வந்துள்ளது. அகத்தியர், திருமூலர், போகர், தேரையர் போன்ற பல சித்தர்கள் இம் மருத்துவத்தைத் தமிழகத்திற்கு ஈந்தனர். அதில் பெரும் பகுதி பல்வேறு காரணங்களினால் கால வெள்ளத்திற்குப் பலியானது போக எஞ்சியதை மக்களின் மீது கருணை உள்ளம் கொண்டு 19ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20ம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வளர்த்த பெரியார்கள் ஆபிரகாம் பண்டிதர். சி. த. சுப்பிரமணிய பண்டிதர் விருதை சிவஞான யோகிகள், க. ச. முருகேச முதலியார், பண்டிட் ஆனந்தம், மாங்காடு வடிவேலு முதலியார், ஹக்கீம் அப்துல்லா சாகேப் முதலியோர் ஆவர்.

சித்த மருத்துவத்தை முறையே கற்பதற்கு யாதொரு வசதியும் இல்லாத அக்காலத்தில் சுயமுயற்சியில் மருத்துவ முறைகள் கொண்ட ஏட்டுச்சுவடிகளைத் தேடிச் சேகரித்தும், தான் திண்டுக்கல்லில் இருந்த காலத்தில் பழனிக்குச் செல்லும் சித்துபுருஷர்களையும் சாதுக்களையும் சந்தித்து அவர்களிடமிருந்து இம்மருத்துவத்திற்கே சிறப்புடைய இரச கந்தகபாஷாணாதிகளைக் கொண்டு செய்யும் சுண்ணம், பஸ்பம், செந்தூரம் போன்ற பெரு மருந்துகளையும், கோரோஜனை, கஸ்தூரி, மூலிகைகள் முதலியவற்றைக் கொண்டு செய்கின்ற மாத்திரை,

லேகியம், தைலம் போன்ற மருந்துகளின் செய்பாக கைபாகங்களையும், ஆட்சி, அளவுகளையும் ஆபிரகாம் நன்கறிந்து கொண்டார். மற்றும் சுருளிமலையில் அருள்மிகு கருணனந்த மகரிஷியின் உபதேசத்தைப் பெற்றதோடு கொடிய கொள்ளை நோய்களையும் விடங்களையும் நீக்கும் அறிவாற்றலையும் பெற்ருர்கள். அவர்கள் காலத்தில் மருத்துவர்கள் தங்களை நாடிவந்த நோயாளர்களுக்குத் தேவையான மருந்தை மட்டும் தயாரித்து வைத்துக் கொண்டு வைத்தியம் செய்தார்கள். தற் காலத்தில் இருப்பது போல் பெரிய மருந்து தயாரிக்கும் நிலையங்கள் கிடையாது. பெரிய அளவில் மருந்து உற்பத்திக்குப் பயன் படுகின்ற இயந்திர சாதனங்களும் இல்லை. பண்டிதர் அவர்கள் பெரும் அளவில் மருந்துகளைத் தயாரித்து, தமிழ்நாடு முழுவதற்கும் அன்றி தமிழர்கள் வாழ்கின்ற இலங்கை போன்ற பிற நாடுகளுக்கும் தமிழ் மருந்துகளைப் பரப்பி தமிழ்மக்களின் உயிர்களைக் காத்த செயல் அளவிலா ஆச்சரி யத்தை அளிக்கின்றது. பெரிய அளவில் செய்யப்படும் மருந்துகளைத் தரம் குறையாமல் நீண்டகாலம் கெடாது இருக்கும்படித் தயாரித்தலும் ஒரு கலையாகும்.

மருந்து தயாரிப்பிற்குத் தேவைப்பட்ட பல அரிய மூலிகைகளைத் தம் பண்ணையிலேயே பயிர் செய்திருக்கிருர். இக்காரியத்தை அரசாங்கமே இதுகாறும் செய்யவில்லை. பண்டிதர் 1898ல் மைசூர், கோயமுத்தூர் போன்ற இடங்களில் பரவிய பிளேக் கொள்ளை நோயைத் தீர்க்க சிறந்த செந்தூரங்களையும், மாத்திரைகளையும் தயாரித்தளித்து பண்டிட் கோபாலாச்சார்லு போல் பேரும் புகழுமடைந்ததைச் சரித்திரத் தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டும். மற்றும் விஷபேதியாகிய காலரா நோயைத்தீர்த்த கருணனந்தர் சமயசஞ்சீவியும் மிக்க புகழ் பெற்றதாகும். சிசுக்கள் குழந்தைகள் மருத்துவமாகிய பாலவாகடத்தை நன்குகற்றிருந்த தகைமையினுல் கஸ்தூரி, கோரோஜனை சம்பந்தப்பட்ட மேன்மையான பிள்ளைப்பிணிகளுக்கு வேண்டிய அத்யாவசிய மருந்துகளை எளிதில் குறைந்த விலையில் கிடைக் கும்படிப்பரப்பிய செயல் மக்கள் மனதில் இன்றும் அழியாதிருப்பது போற்றத்தக்கதாகும்.

மக்கள் பிணிதீர்க்கும் பணியிலும் மருந்து செய்தொழிலிலும் ஆப்ரகாமின் மனைவியார் திருமதி ஞானவடிவு பொன்னம்மாளும் துணை நின்றிருக்கின்ருர்கள். இதனுல்தான் பிள்ளைப்பிணி நீக்கத்திற்குத் தேவைப்பட்ட தரமுள்ள சிறந்த கருணனந்தர் சஞ்சீவி மருந்துகள் மக்க ளுக்குக் கிடைத்திருக்கின்றன என்று எண்ணுவதும் மிகையாகாது.

அம்மம்மா, பண்டிதர் வாழ்ந்த 60 ஆண்டுகளுக்குள் ஆசிரியப்பணி சித்தமருத்துவப்பணி, இசைப்பணி, வேளாண்மைப்பணி, சமயப்பணி, வெளியீட்டுப்பணி, ஆகியவைகளைச் செய்து கலைகளை வளர்த்து மக்களுக்குத் தொண்டாற்றியிருப்பது இறை அருளின்றித் தனி ஒரு மனிதன் செயற்கறிய செயலன்று. தஞ்சை ஆபிரகாம் நாமம் என்றும் நிலைபெற்று வாழ்க.

டாக்டர் ஆர். தியாகராஜன்



டாக்டர் வி. மா. ஞானப்பிரகாசம் சே. ச.
*புனித சவேரியார் கல்லூரி,*
*பாளையங்கோட்டை.*

## அணிந்துரை

அபிரகாம் பண்டிதர் அனைவரும் அறியாக்
குடத்து விளக்காய்க் கிடந்ததை மாற்றி
வீட்டில் உள்ளோர் நாட்டில் உள்ளோர்
ஒளிபெற்று வழிகண்டு உயர்வினை அடைய
நூலொன்று படைத்துள்ளார் நண்பர் தனபாண்டியன்.
சிறிய நூலே, அரிய செய்திகள்
அறிய வைக்கும் பெரிய கருவியே
இனிய பலவற்றை இணைத்த பண்பே
அபிரகாம் அவரின் அரிய பண்பாம்.
இசையைச் சோதிடக் கலையை இணைத்தார்
மருத்துவம் தந்த மாபெரும் செல்வம்
அரிய இசையின் ஆழ்ந்த ஆய்வுக்குப்
பெரிதும் பயன்பட மகிழ்ந்து அளித்தார்
கீர்த்தனை பாடினார் கீர்த்தி பெற்றார்
இயேசுவின் பாடுகளை இரங்கிப் பாடினார்
இந்துமதக் கருத்தை இணைத்துப் பாடினார்
தேனில் குழைத்த தேமா ஆயிற்று
விவிலியம் இங்கே வேரூன்ற உதவிற்று
பிறசமய நண்பர் பலரை மதித்து
நட்புடன் பழகி நன்மையை ஏற்றார்
சமயப் பொறையும் சமய வளர்ச்சியும்
அமையப் பெற்றார் அபிரகாம் பண்டிதர்
அவரது பரம்பரை அணையாது ஒளிர
இவரது நூலும் இணையிலா வழியே
வாழ்க அபிரகாம் வளர்த்த பணியே
ஆழ்க அவரது அன்புப் பண்பே

**வி. மா. ஞானப்பிரகாசம் சே. ச.**

பாவலரேறு ச. பாலசுந்தரம்
முன்னாள் துணைமுதல்வர்,
புலவர் கல்லூரி,
கரந்தைத் தமிழ்ச் சங்கம்.

## பண்ணிசை வளர்த்த தண்ணளியாளர்

அருளாளர்களையும் அறிவியற் கலைஞர்களையும் சமுதாயத் தலைவர்களையும் அமிழ்திசைக் கவிஞர்களையும் அவ்வக்காலங்களில் அத்துறைக் குறைகளைக் களைய இறைவன் தோன்றச் செய்கிறான் என்பது தெய்வ நெறியறிந்தொழுகும் சான்றோர்தம் நம்பிக்கை.

மன்னுமுத்தமிழ் பயிலும் தென்னகப்பரப்பினுள் அத்தகைய சான்றோருள் ஒருவராகத் தோன்றிய ஆன்ற பேரறிஞர் இசைக்கலையில் விஞ்சிய தொண்டாற்றிய தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் என்னும் அரும் பெறற் செம்மல்.

அருளும் பொருளும் அறிவும் நிறையும் அன்பும் பண்பும் உழைப்பும் விழிப்பும் வண்மையும் தண்மையும் ஒருங்கமைந்த பெருந் தகையாளர். பாண்டிநாட்டுத் தென்காசிப்பதியீன்று சோழ நாட்டுத் தஞ்சையம்பதிக்களித்த விஞ்சைமுத்து இசைத்தமிழ்ச் சித்து

பிற்படுத்தப்பட்ட சமுதாயத்தில் எளியதொரு குடும்பத்தில் தோன்றி இறையருளாலும் இடையறு உழைப்பாலும் உயர்ந்தோங்கி உலகுபயன் கொள வாழ்ந்த உத்தமர் ஆபிரகாம் அவர்கள்

இளம்பாலாசிரியப்பணியில் தன் வாழ்க்கையைத் தொடங்கி இயற்றமிழ்ப் புலவனாக, கோள் கணித மேதையாக, செந்தமிழிசைக் கவிஞனாக, சித்த மருத்துவச் செம்மலாக ஏழிசைப் பேராசானாக வளர்ந்து அவ்வத்துறையில் அரும் பயன் விளைத்த அண்ணல், இயேசுவின் நேசரான தஞ்சை ஆபிரகாம்பண்டிதர்.

தோட்டக்கலையின் தொன்முறையறிந்து தன் நுண்ணறிவுத் திறனால் பழமரங்களிற் புதிய விளைவுகளைப் பெருக்கி நிதியைக் குவித்த மதியுடையார். குழவி முதற் கிழவர் வரை உற்ற பிணி நீங்கி உடல் வளம் பெறச் சித்தர் முறை கமழும் ஒத்த மருந்துகளைச் சிறந்த முறையிற் செய்து குறைந்த விலைக்கு வழங்கிக் குறைவிலாச் செல்வங்குவித்த குணசீலர்.

பயிர்த் தொழிலாலும் பண்டுவத்தாலும் ஈட்டிய செல்வத்தை முத்தமிழ் நலத்திற்கும் குறிப்பாக இசைத்தமிழ் வளர்ச்சிக்கும் கைம் மாறு கருதாது வழங்கி நிறை வாழ்வு பெற்றவர்.

அவர் காலத்தில் அவர் அறியாத அவரையறியாத இசைக் கலைஞர்களே இல்லை எனலாம். தமிழ் உள்ள அளவும் தலையாய புகழொடு தருக்கிநிற்கும் கருணாமிர்த சாகரம் என்னும் ஒப்புநிகரற்ற இசையாராய்ச்சிப் பெருநூல் அவர்தம் அறிவாராய்ச்சித்திறனுக்கும் முத்தமிழ் வேட்கைக்கும் ஈகைக்கும் ஈகத்திற்கும் விழுமிய சான்றாகும்.

கலைத்துறை-மொழித்துறை, மருத்துவத்துறை இசைத்துறை சமயத்துறை முதலியவற்றுள் அவர் ஆற்றிய தொண்டின் சிறப்பினையும் அதன் பயனையும், கைம்மாறு கருதாத அவர் தம் அரும் பெறற் பண்பு களையும் வாழ்க்கைக் குறிப்புக்களொடு சுருக்கமாக விளக்குகின்றது இச்சிறு நூல்.

இந்நூலை வரைந்துதவும் பெருமகனார் இசைத்துறைப் பேராசிரியர் திருமிகு டி. ஏ. தனபாண்டியன் அவர்கள், அண்ணல் ஆபிரகாம் பண்டிதர் அவர்களின் அருமந்த பெயரர் ஆவார். முத்தமிழ்ப் பயிற்சியும் வித்தகமும் வாய்க்கப்பெற்றவர். தமிழிசை (கருநாடக இசை) மேலை யாரிய இசை நூல்களில் தேர்ச்சியும் நேர்ச்சியும் உடையவர். தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் இசைத்துறைப் பேராசிரியராகவும் தலைவ ராகவும் அமர்ந்து தம் தாதையார் நூல் நெறியிற் பல புதிய பண்களை (இராகங்கள்) உருவாக்கி இசைத்தமிழ்க்குப் பேராக்கம் புரிந்து வரும் நல்லறிஞர். பல்லாண்டுகள் அனைத்திந்திய வானொலித் துறையில் அமர்ந்து பணியாற்றிய பண்பாளர்.

பண்டிதர் அவர்களின் பெயரர் என்னும் முறையில் அவர்தம் குடும்ப வரலாறு குணநலன்களை நன்கறிந்தவர்.

பண்டிதர் அவர்களின் பண்பாடுகளையும் அரும் பெருந் தொண்டு களையும் அரிய பல நிகழ்ச்சிகளையும் அன்பர்கள் நண்பர்களின் துணையும் வினையும் பற்றிய குறிப்புக்களையும் அவர் உற்ற பெருமைகளையும் எய்திய பட்டங்களையும் கல்வியறிவு நூலாராய்ச்சி நுட்பங்களையும் விரிவாக வரைந்துணர்ந்துணர்த்தும் கடப்பாடுடையவராயினும் அவற்றை மிகச் சுருக்கமாக வரைந்து அவர் தம் தொண்டின் விளைவு களையும் பயன்களையும் பற்றியவற்றிற்கு முதன்மை தந்து ஓர் அறிமுக நூலாக இதனைப் படைத்துள்ளார்.

இந்நூலைப் பண்டிதர் அவர்களின் இளமைப் பருவம் என்பது முதலாகத் தொடரும் பணி என்பது ஈருக எட்டுத் தலைப்புக்களில் அமைத்துள்ளார். இவற்றுள் பிணி தீர்க்கும் பணி முதலிய ஆறு தலைப்புக்கள் ஆபிரகாம் அவர்களுடைய அரும்பணிகளின் விளைவு பற்றியவை. அவற்றுள் தேவையான குறிப்புக்களைச் சுவையாகச் சுட்டியுள்ளார்கள். ஒவ்வொன்றும் பன்னூறுபக்கங்களில் விரிவாக எழுதப்பட வேண்டியவை என்பதை இந்நூலைக் கண்ணுறுவோர் அறியலாம். அவை தொடரும் பணியாகலின் தொடங்கும் பணி என்னும் தலைப்போடு இந்நூலை நிறைவு செய்துள்ளார்போலும்.

இன்றைய தமிழ் ஆய்வாளர் எதை எதைப்பற்றியே ஆராய்ந்து குவிக்கின்ருர்கள். முனைவர் (டாக்டர்) பட்டம்பெற ஆய்வாளர்கள் பண்டிதர் அவர்களின் வரலாற்றை மட்டுமன்று தோட்டக்கலை முயற்சி சித்த மருத்துவத்தொண்டு- இசைக்கலைக்கு அவர் ஆற்றியுள்ள பணி முதலியவற்றை ஆராய்ந்து வெளிப்படுத்துவாராயின் அவை உண்மை யான தமிழாராய்ச்சியும் தமிழ்த் தொண்டுமாகும். அத்தகுமாணவர் கட்கு இச்சிறுநூல் ஒரு தூண்டுதலாக அமைந்துள்ளது.

இதனைப் படைத்தளித்த பேராசிரியர் தனபாண்டியனவர்களைப் பாராட்டுகின்றேன். இம் முறையில் அவர் மேலும் பல நூல்களை இயற்றித் தமிழுலகத்திற்கு அளித்துதவ எல்லாம் வல்ல் இறைவனை வேண்டி வாழ்த்துகின்றேன். வளர்க முத்தமிழ்க் கலைகள்.

அன்பன்

**ச. பாலசுந்தரம்.**

கலைமாமணி, இசைப்பேரரசி

டாக்டர் சேலம் எஸ். ஜெயலட்சுமி,

அடையாறு

சென்னை

24—2—84

## மதிப்புரை

## தஞ்சை ஆபிரகாம் பண்டிதர்

'தமிழிசை இலக்கண மரபு' என்று நான் எழுதியுள்ள நூலில் தஞ்சை ஆபிரகாம் பண்தடிர் அவர்களுடைய வாழ்க்கைக் குறிப்பு களைச்சேர்க்க வேண்டுமென விரும்பினேன். 'கருணாமிர்த சாகரம்' என்ற அவர்களுடைய கடல்போன்ற இசையாராய்ச்சி நூலில் அவர் களைப் பற்றிய எந்தக் குறிப்பும் இல்லை. ஆனால் அவர்கள் அக் காலத்தில் இருந்தநூற்றுக்கணக்கான வித்துவான்களைப் பற்றி மட்டும் நிறைய குறிப்புகள் கொடுத்துள்ளார்கள். தமிழிசைக்கு ஆதரவாகச் சிலப்பதிகாரத்திலிருந்து பெரும் விளக்கங்கள் எழுதி இவ்வளவு அரிய தொண்டு செய்தவர்களைப் பற்றியும் இவர்களுடைய வரலாற்றைப் பற்றியும் செம்மையாக யாரும் செய்யவில்லையே என்று உள்ளூர வருத்தம் ஏற்பட்டது. பின்னர் மற்ற நூல்களை அலசி ஆராய்ந்ததில் பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி அவர்கள் வெளியிட்டுள்ள Dictionary of South Indian Music என்ற தொகுதியில் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவர்களைப்பற்றி அழகிய ஆனால் சுருக்கமான குறிப்புகளைக் கொடுத் திருந்தார்கள். பேராசிரியர் அவர்களை மனதில் பெரிதும் பாராட்டிக் கொண்டு நான் அக்குறிப்புகளை எடுத்துக்கொண்டேன்.

தஞ்சை பண்டிதர் அவர்கள் இசையில் மட்டுமா வல்லவர் மருத்துவம், சோதிடம், விவசாயம் போன்ற பல கலைகளிலும் வல்ல வராயிற்றே. இவரைப் பற்றிய விவரங்கள் இவர்களுடைய பேரர், பேராசிரியர் து.ஆ. தனபாண்டியன் அவர்களைத்தான் கேட்டு வாங்க வேண்டும் என்று நான் எண்ணிக்கொண்டுருந்த போது, என்ன ஆச்சர்யம்! எனக்குத் தபால் மூலம் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவர்களைப் பற்றிய சிறு நூலும் அதற்கு ஒரு மதிப்புரை வேண்டும் என்று திரு தனபாண்டியன் அவர்கள் எழுதிய கடிதமும் வந்தன. எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

திரு. து. ஆ. தனபாண்டியன் அவர்கள் தனது பாட்டனாரைப் பற்றிய வரலாற்றை மிகவும் சுருக்கமாகவே எழுதியிருக்கிறார்கள். சாகரம் போன்ற ஒரு நூலை எழுதியவருக்கு எத்தனையோ பெரும் வரலாற்று நூல்களைப் படைக்கலாம் என்றாலும் முதன் முதலாக இந்த ஒரு நூலேனும் வெளிவருவது மிகவும் வரவேற்கத் தக்கதாகும்.

தஞ்சை பண்டிதரின் கருணாமிர்த சாகரத்தை மீண்டும் நான் படித்து குறிப்புகள் எடுக்கும் போது, எப்படி இவர்கள் இத்துணைச் செய்திகளைச் சேகரித்நார்கள் யாரிடமிருந்து அறிந்தார்கள் ஒரு தனி மனிதருக்கு இவ்வளவு அறிவா, ஆற்றலா, வல்லமையா என்று எண்ணி எண்ணி வியக்கத் தோன்றும் பண்டிதர் அவர்கள் ஜோதிடம் கணிதம், மருத்துவம், எல்லாவற்றையும் அரிதில் முயன்று பல பெரியார்கள், மகான்களிடமிருந்து கற்றிருக்கிறார் கணிதமும் சோதிடமும் நன்கு கற்றிருந்ததால் சிலப்பதிகாரத்தில் இராசி மண்டலத்தைக் குறித்துச் சொல்லி இளங்கோவடிகள் இசை நுணுக்கங்களை வெளியிட்டிருப்பதை அவர்களால் நன்கு புரிந்து கொள்ள முடிந்தது.

சாரங்கதேவரின் இருபத்திரண்டு சுருதிகள் என்னும் தவறான கருத்து வெகுவாகப் பரவியிருந்ததை உற்றுணர்ந்து ஆராய்ந்து, பிற அறிஞர்களான திரு. ஈ. கிளமென்ட்ஸ் திரு. ராஜா சுரேந்திர மோகன் நாகூர், திரு மே. பி தேவால் மற்றும் பலருடைய ஆய்வுகளையும் தீர ஆராய்ந்து பின் சாரங்கதேவரது சங்கீத ரத்னாகரம், சிலப்பதிகாரம் இவைகளை ஒப்பிட்டுப் பார்த்து தமது திட்டமான கொள்கைகளைத் தெரிவிக்கின்றார்கள் பல இசை மாநாடுகளை நடத்திப்பல இசைக்கலைஞர்களையும் பேரறிஞர்களையும் கூட்டி விவாதங்கள் நடத்தி, பெரும் சபைகளில் தனது ஒப்பற்ற தீர்மானங்களை நிறைவேற்றுகிறார்கள்.

தமிழிசையில் ஆயப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலை என்ற நான்கு இசைமுறைகள் இருந்தன என்பதை வகைப்படுத்தி சூத்திரங்களின் ஆதாரத்தோடு முதன்முதலாக நிலை நிறுத்திய பெருமை தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவர்களையே சாரும். தமிழிசையின் காலத்தைத் சேர்ந்த கிரேக்க இசையிலும் Dia-tonic, chromative, enharmonic என்று ஏழிசை, பன்னிருஇசை, இருபத்தி நான்கு கால்சுரம் முதலியவை காணப்படுவது பண்டிதரின் கொள்கைகளை மேலும் வலுப்படுத்துகிறது. வட்டப்பாலையை இராசி மண்டலமாகப் பன்னிரு வீடுகளை அமைத்து அவற்றிற்குரிய சுரங்களைப் படைத்து இளங்கோவடிகள் போற்றும் 'அழியா மரபை'

தெள்ளத்தெளிய அரிய வாதங்களால் அறிவுறுத்தி வெளிப்படுத்திய பண்டிதரின் ஆற்றல் அளவிற்கடங்காது. தமிழிசையின் தொன்மையையும் ஈடு இணையிலாப் பெருமையையும் எண்ணி எண்ணிப் பெருமிதம் கொள்ளும் பண்டிதர் அவர்கள் ''என்னே தமிழின் பெருமை'' ''என்னே தமிழிசையின் ஏற்றம்; இவ்வுண்மைகளை உணரும் போது சாரங்கதேவர் சிலப்பதிகார ஆசிரியரின் அருகே கூட அணுக முடியாதே'' என்று கூறுகிறார்.

தவத்திரு விபுலானந்த அடிகளின் யாழ்நூலும் ஓர் இசைக் களஞ்சியம் என்றாலும் அது இலக்கிய அளவிலேயும் அணுகு முறையிலும் பலவாற்றாலும் சிறந்து விளங்கினாலும் தஞ்சை பண்டிதர் அவர்களது நூல், இசை பற்றிய ஆராய்ச்சியில் ஓங்கி நிற்கிறது. சில கருத்து வேறுபாடுகளையன்றி இருநூல்களும் இசை உலகிற்குப் பெரும் பொக்கிஷமாகும். பண்டிதர் அவர்கள் சுருதி முறையைப் பற்றிப் பெருவாரியாக அலசி ஆராய்ந்துள்ளார்கள். முதற்பண் ஆகிய செம்பாலைப் பண் சங்கராபரணம் என்ற c-major என்பதை அவர்கள் உறுதிப்படுத்துவது உலக இசைக்கே ஒரு மாபெரும் வெற்றியாகும். அவர்களுடைய 24 சுருதி முறையை வீணை வித்துவான் வீணை ஷேசண்ணா, அரிகேச நல்லூர் எல். முத்தையா பாகவதர் போன்ற ஆராய்ச்சியாளர்களும் பரோடா திவான் திரு. வி. பி. மாதவராவ் போன்ற ஆராய்ச்சியாளர்களும் ஏற்றுக்கொண்டு பாராட்டியுள்ளார்கள்.

பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி அவர்கள் தமது இசை அகராதியில் ஆப்ரகாம் பண்டிதர் அவர்களைப் பற்றிக்கொடுத்துள்ள குறிப்பு வருமாறு :-

''ஆபிரகாம் பண்டிதர்-ராவ்சாஹேப் 'கருணாமிருத சாகரம்' என்ற பெரும் நூலை இரண்டு தொகுதிகளாக வெளியிட்ட புகழ்பெற்ற ஆசிரியர். இந்நூல் 1500 பக்கங்களைக் கொண்டது. தமிழிசைச் செல்வத்தைப்பற்றிய ஏராளமான செய்திகளைத் தரும் இசைக் களஞ்சியம். இந்த நூற்றாண்டில் முதல் முதலாகத் தென்னிந்தியாவில் இசை மகாநாடு நடத்தியவர் பண்டிதர். 1912-16 ஆண்டுகளில் நடந்த இம்மாநாடுகள் பல அரிய கருத்துகளையும் உண்மைகளையும் நல்கி சங்கீத உலகிற்கு பெரும்பணி ஆற்றியுள்ளன. 1916-ம் ஆண்டில் முதல் முதலாகப் பரோடாவில் நடந்த அகில இந்திய இசை மாநாட்டில் இவர் கலந்து கொண்டார். இந்திய அரசு இவருக்கு ராவ்சாகேப் என்ற பட்டத்தை அளித்துக் கௌரவித்தது.''

பேராசிரியர் தனபாண்டியன் அவர்கள் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் என்ற நூலை எட்டுப்பகுதிகளாகப் பிரித்துப் பண்டிதரின் பலவித ஆற்றல்களையும் வரலாற்றையும் மிகச் சுருக்கமாகக் கூறியுள்ளார். முதல் முயற்சியாக இந்நூல் வெளியாகிறது. மேலும் ராவ்சாகேப் பண்டிதர் அவர்களைப் பற்றி மிக மிக விரிவாகப் பல நூல்கள் வரவேண்டு மென்பது என் அவா. அவர்களுடைய முயற்சிகளை அடியொற்றி ஆய்வுகளைத் தொடராமல் பல ஆண்டுகள் வீணே கழிந்தாலும் இப்போது பண்டிதர் அவர்களின் கொள்கையை ஒட்டித் தமிழிசை மரபும் இலக்கணமும் நிலை நிற்கும்படிச் செய்ய புதிய முயற்சிகள் நடந்து வருவது தமிழிசைக்கு ஒரு நல்ல காலம்.

சிறப்பாகத் தமிழ்ப் பல்கலைக்கழகம் அமைக்கப்பட்டு துணை வேந்தர் திரு. வி. ஐ. சுப்பிரமண்யம் அவர்கள் தலைமையில் பல அரிய ஆய்வுகள் நடந்து வருவது மிகவும் போற்றத்தக்கது. இம்முயற்சிகளை உண்மையாக்க தமிழுக்கு உன்னதமான பொற்காலமாகிய பொன்மனச் செம்மல் மாண்புமிகு எம். ஜி. ஆர். அவர்களது ஆட்சி அமைந்திருப்பதே அடிப்படைக் காரணம் என்பதைத் தமிழ் மக்கள் உணர்ந்து பெருமிதம் கொள்கிறார்கள் என்பதே உண்மை. இது மிகையல்ல.

டாக்டர் எஸ். ஜெயலட்சுமி

திருப்பாம்புரம். **சோ. சண்முக சுந்தரம்,**
முதல்வர், தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரி, மதுரை.

# ஆபிரகாம் பண்டிதர் இசைத்துறைக்குச் செய்துள்ள தொண்டு

சமய குரவர்கள் காலத்திற்குப் பின்பு தமிழிசையைக் கண்டவாறு நெறிமுறையாய் ஆராய்ந்து வெளிப்படுத்தாமல், இசைத்துறை ஒளியும், உயர்வும் பெறாமல் கிடந்தது. இருபதாம் நூற்றாண்டில் தமிழிசையின் நெறியினை இசையறிந்தோர் பலருடன் கூடி ஆராய்ந்து நூல் வெளியிட்ட பெருமை, மு. ஆபிரகாம் பண்டிதரையே சாரும்.

1. 1917-ல் இசை இலக்கண முழுமையினையும் ஒன்று திரட்டிக் ''கருணாமிர்த சாகரம்'' என்னும் பெயரில் இசைநூல் வெளியிட்டதால் பல செய்திகள் மறைந்து போகாமல் இன்று நம்மிடையே காக்கப் பட்டு விட்டன.

2. இன்று நம்மிடையே இருந்து வரும் 'ஐந்திசைப்பண்' ''யாழ் நூல்'' 'சிலப்பதிகார இசைநுணுக்கம்' 'பழந்தமிழிசை' முதலிய இசை இலக்கண நூல்களுக்கு முன்னர் தோன்றி இந்நூல் களுக்கு வழிகாட்டியாய், 'கருணாமிர்த சாகரம்' விளங்குகிறது.

3. பண்களைப் புடமிடல், இணை, கிளை, நட்பு நரம்புகளைப் பயன்படுத்தல், ஆளத்தி பாடுதல், பழந்தமிழ் இலக்கியச் சுவைகளைச் சிலப்பதிகாரச் செய்திகளோடு இணைத்துக்காட்டல், ஆங்கில இசை முறையில் தமிழிசையை எழுதுதல், பொருந்திசை நரம்புகளால் பாடுதல், இசை மாநாடுகள் கூட்டுதல் 24 அலகு (சுருதி) முறையின் சிறப்பை அறிவித்தல், சுரங்கள் தோன்றிய முறைகள், நாற்பெரும் பண்கள், ஏழ் பெரும் பாலைகள், தேவாரகாலம் முதல் இராகங்களின் வரலாறு, இவை போன்ற அரிய இலக்கணங்களை ஆய்ந்து அளித் துள்ள முதன்மை மு. ஆபிரகாம் பண்டிதர் அவர்களையே சாரும்.

4. தமிழகத்தில் முதன் முதல் மு. ஆபிரகாம் பண்டிதர் கீதம், வர்ணம், முதலியவைகளத் தமிழில் கற்பிக்க வேண்டுமென்று இவற்றை இயற்றித் தமிழிசை இயக்கத்திற்குத் தோற்றுவாய் அருளினார்.

5. புதிய இராகங்களை உண்டாக்க இயலும் என வழி வகுத்தார். தென்னக இசை தோன்றி வளர்ந்த வரலாற்றை ஆய்ந்து அறிந்து தொகுத்து தம் நூல்களில் வகுத்துள்ளார்.

6. தென்னக இசை வரலாறு தம் நூலுள் அடங்குமாறு சிந்தித்து அமைத்தார். சிலப்பதிகாரத்தின் அடியார்க்கு நல்லார் விளக்கங் களை முதன் முதலில் அடியொற்றிப் படித்து ஆய்ந்து பல்வேறு விளக்கக் கட்டங்கள் அமைத்து விளக்க முற்படுகிறார்.

7. கீர்த்தனைகளுக்கு இசையமைக்கும் நெறி முறைகளை ஆராய்ந்து கண்டு, உலகினுக்கு எழுதி உதவினார்.

8. தான் வாழ்ந்த காலத்து இசைமேதையர்களின் வரலாற்றுச் சுருக்க அகராதி அமைத்துள்ளார். சுருக்கமாகக் கூறினால் தென்னக இசைக்காகவே உடல், உயிர், செல்வம், வழிவழி மக்கள், மண் அனைத்தையும் தத்தம் செய்த உத்தமப் பெரியார் நம் மு. ஆபிரகாம் பண்டிதர்.

காலத்தால் உண்மையும், சீலத்தால் முதன்மையும் பூண்டு இசை ஆராய்ந்து, இசை மயமாய் வாழ்ந்த ஈடு இணையில்லா ஆராய்ச்சி யின் பெருந்தகை மு. ஆபிரகாம் பண்டிதரின் இத்தொண்டினை நன்றி மறவாத நற்றமிழர்களின் உள்ளத்தாலும், நான் வணங்கும் குருவின் அருளாலும் நன்றி மறவாமல் போற்றுகின்றேன்.

வாழ்க தமிழ்! வளர்க தமிழிசை!

திருப்பாம்புரம் சோ. சண்முகசுந்தரம்
30-3-84

டாக்டர் வி. பிரேமலதா, எம்.ஏ., பி.எச்.டி.,
*முதல்வர், ஸ்ரீ சத்குரு சங்கீத வித்யாலயம்.*

மதுரை - 2,
29—2—84

# மதிப்புரை

தென்னிந்திய இசையின் வரலாற்றில், தமிழிசை இயக்கம் தோன்றி வளர்வதற்கு ஆதரமாக இருக்கின்ற "கருணாமிர்த ஸாகரம்" என்னும் அரிய இசை நூலை எழுதிய தஞ்சை ஆபிரகாம் பண்டிதரின் வாழ்க்கைச் சரித்திரத்தை, அவருடைய மகள் வழிப் பேரனும், தற்சமயம் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் இசைத்துறைப் பேராசிரியராகப் பணிபுரிந்து வருபவருமான திரு. டி. ஏ. தனபாண்டியன் அவர்கள் எழுதியுள்ளார்கள். அவருடைய படைப்பு மிகவும் போற்றத் தக்கது.

ஆபிரகாம் பண்டிதருக்குப் பல்வேறு துறைகளான புகைப்படம் எடுத்தல், விவசாயம், அச்சுத் தொழில், ஆசிரியர்பணி, இசையார்வம், இசை ஆராய்ச்சி ஆகியவற்றில் இருந்த திறன் பற்றித் திரு. தனபாண்டியன் கேட்டறிந்த உண்மைக் குறிப்புகளை இந்நூலில் எழுதியுள்ளார். ஆனால் இந்நூலில் ஓர் இடத்திலும், தான் ஆபிரகாம் பண்டிதரின் வாரிசு என்பதை வெளிப்படுத்தாதது, அவருடைய தன்னடக்கத்தையும், பண்டிதரிடம் அவர் கொண்டுள்ள பக்தியையும் மிகைப்படுத்துகிறது.

ஆபிரகாம் பண்டிதர் எல்லாத் துறைகளிலும் தேர்ச்சி பெற்றிருந்தாலும், இசைத்துறையில் அவரது அறிவின் மேம்பாட்டையும், தொண்டையும் நூலாசிரியர் வெகு தெளிவாகவும், அழகாகவும் எடுத்துக்கூறியிருக்கிறார். எல்லா இசைக் கல்லூரிகளிலும், நூலகங்களிலும் இடம் பெற வேண்டிய ஒரு முக்கியமான நூல்; இசை மேதையின் வாழ்க்கை வரலாற்றை, அவர் சந்ததியினருள் ஒருவரே எழுதியிருப்பதால், இந்நூலின் மதிப்பு பன்மடங்காக உயர்வு பெற்றுள்ளது.

மேலும் இந்நூல் இசை இலக்கண வல்லுநர்கள், இசை ஆசிரியர்கள், ஆராய்ச்சி செய்பவர்கள் (Musicologists, Music Teachers & Research Scholars) யாவருக்கும், ஆபிரகாம் பண்டிதரின் "கருணாமிர்த ஸாகரத்தைப் படிக்க வேண்டும், என்ற ஆவலைத் தூண்டுகிறது. இந்நூலில் காணப்படும் மற்றுமுள்ள சிறப்பியல்புகள் - (பக்கம் 34)

பரோடாவில் 1916ல் நடைபெற்ற அகில இந்திய இசை மகாநாட்டில், பண்டிதர் கலந்துகொண்டு, சுருதிகள் பற்றிய தம் கருத்துக்களை விரிவாகக் கூறிப் பேசும் போது, அவரது புதல்விகள் திருமதி மரகத வல்லி துரைபாண்டியன், சுருதிகளின் நுட்பங்களை அழகாகப் பாடியும், திருமதி கனகவல்லி நவமணி வீணையில் வாசித்தும் காட்டிய தாகக் கூறப்பட்டிருப்பது ''கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்'' என்பதை இது நினைவு படுத்துகிறது.

ஆபிரகாம் பண்டிதரின் தொண்டினை மட்டும் விமரிசிக்காமல், அத்துடன் அவர் செல்வமும், புகழும் பெற்றார் என்று இந்நூலாசிரியர் குறிப்பிட்டிருப்பது, அவர் ஒரு உண்மை விளம்பி, என்பதைத் தெரிவிக் கிறது. நூலின் கடைசிப் பகுதியில் கொடுக்கப்பட்டிருக்கும் இசைத் தமிழ் பற்றிய குறிப்புகள், இசை சம்பந்தமான இத்தகைய நூல்களில் சேர்க்கப்படவேண்டியது மிக முக்கியம். இதற்காகவும் இந்நூலாசிரியர் நமது பாராட்டைப் பெறத் தகுதிபெறுகிறார்.

சிறந்த இசை இலக்கண கர்த்தாவும், பல்துறை விற்பன்னருமான தஞ்சை ஆபிரகாம் பண்டிதரின் வாழ்க்கைச் சரித்திரத்தை ஒரு சிறந்த, சிறிய நூலாக வெளியிட்டுள்ள முயற்சி பாராட்டுதற்குரியது.

டாக்டர் வி. பிரேமலதா

டாக்டர் வீ. ப. கா. சுந்தரம்
*மதுரைப் பல்கலைக்கழக இசை ஆய்வுப் பேராசிரியர்.*

மதுரை 4.

தமிழ்ப் பல்கலைக் கழக இசைத்துறைப் பேராசிரியர் து. ஆ. தன பாண்டியனார் பெரிதும் முயன்று ''மு. ஆபிரகாம் பண்டிதர்'' என்னும் வரலாற்று நூலை வெளியிடுகிறார். இந்த இனிய இசை வரலாறானது மறைந்து விடாது சிறந்து நிற்க இவர் நூல் பெரிதும் உதவும்.

மு. ஆபிரகாம் பண்டிதர் செயற்கரிய செய்த செம்மல்; பலவகையில் தொண்டாற்றிய பண்பாளர்; பாடகர்கட்கு வாரி வழங்கிய வள்ளல். கடலனைய இசை ஆய்வு நூல் இயற்றிய இனியர். கொள்ளை நோயினால், தம் முன்னோர் முன்னர் பலர் இறந்துபட்டனர் என்னும் அதிர்ச்சி அவர் வாழ்க்கையில் ஏற்பட்டது; எனவே பிணி நீக்கும் பணியில் தணியாத தாகம் கொண்டு-தக்க மருந்துகளை மிக்க முயன்று கண்டுபிடித்தார். மருந்துகள் மூலம் தம்மை வந்து பொருந்திய பெரும் பணத்தை இசை ஆய்வுப் பணிக்கெனச் செலவழித்தார்

இவரது இசைப்பணி, பலவகைப்பட்டது. பாடுதுறை வல்லுநர்களிடம் பாடுதுறை பற்றிய பல செய்திகளைக் கேட்டறிந்தார். டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் போன்று, நாடு முழுவதும் நாடி, இசை ஏடுகளைப் பெற்றார்; இசை மாநாடுகளை நடத்தினார்; இரவு பகல் தமிழ்க் கடல் மூழ்கி, இசை முத்துக்களை எடுத்து எடுத்துக் கோத்துக் ''கருணாமிர்த சாகரம்'' என்னும் நூலை வெளியிட்டார்.

தமிழிசையியக்கத்திற்கு வித்திட்டது போல் கீர்த்தனை, வர்ணம், கீதம் முதலியவற்றைச் சீரிய இலக்கியமாகச் செந்தமிழில் செய்து காட்டினார். இவர் காலத்து இசை மேதைகள் தெலுங்கிலும், சமசுகிரதத்திலும் பாடல்கள் இயற்றிக் கொண்டிருந்தனர்.

இவ்வாறு உழைத்த இசையாராய்ச்சி மேதைக்கு - மருத்துவ மன்னர்க்கு-வேளாண்மை வித்தகர்க்கு-இன்று ஆளும் தமிழக அரசு - தஞ்சையில் ஒரு நினைவுச்சின்னம் ஏற்படுத்தலாம். இதனை இறையருள் கூட்டும் ஒரு நாளில்.

## இசை ஆய்வில் அகரமானூர்.

தென்னக இசைக்கு வேரும் மூலமும் வடமொழியில் உள்ளன என்று கூறிவந்தனர்; இன்றும் கூறிவருகின்றனர். தென்னிசைக்கு மூலம்-தண்டமிழ் இலககியங்களில் உள்ளன என்று மு. ஆபிரகாம் பண்டிதர் நிலை நாட்டினூர்; மேலும் இசைத்துறைச் சொற்களைக் தமிழாக்குதல் வேண்டும் என்னும் ஆவலை மூட்டினூர்; தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலப்பதிகாரம், அதன் இரு பெரும் உரைகள், காப்பியங்கள், நிகண்டுகள், தேவாரம், திருவாசகம், திவ்வியப பிரபந்தங்கள் முதலிய நூல்களில் விண்மீன்கள் போலச் சிதறிக்கிடக்கும் இசைக் குறிப்புக்களை முதன்முதலில் திரட்டித் தொகுத்துக் ''கருணாமிர்த சாகரம்'' என்னும் நூலை 1917-ம் ஆண்டு வெளியிட்டார். இசையாராய்ச்சித்துறைக்கு இந்நூலே அகரமாகியது; முப்பது ஆண்டுகள் கழித்து இதனைப்பின்பற்றி 1947-ம் ஆண்டு ''யாழ் நூல'' தோன்றியது. இவ்விரு நூற்களின் வழி 1956-ம் ஆண்டு ''சிலப்பதிகாரத்து இசை நுணுக்கம்'' தோன்றியது.

மு. ஆபிரகாம் பண்டிதரின் ஆய்வு பற்றி ஐந்து செய்திகளை மட்டும் குறிப்பிடல் நயனும் பயனும் நல்கும். 1. பொருந்திசை நரம்புகள். 2. அடிப்படைப்பாலை 3. பண்ணுப்பெயர்க்கும் முறை 4. 22 அலகும் 24 அலகும். 5. பண்களைப் புடமிடும் முறை. இவ்வைந்தைப்பற்றியும் மு. ஆபிரகாம் பண்டிதர் திறம்பட விளக்கியுள்ளார்.

என் நண்பர் திருமிகு து. ஆ. தனபாண்டியரின் முயற்சி பெரிதும் பாராட்டற்குரியது. இவர் மேலும் மேலும் இசை ஆய்வு நூற்கள் எழுத இறையருள் கூட்டுவதாக.

வீ. ப. கா. சுந்தரம்

அருள்திரு. டாக்டர். தி. தயானந்தன் பிரான்சிஸ்,
பொதுச் செயலாளர்,
கிறிஸ்தவ இலக்கிய சங்கம்.

சென்னை - 600003
நாள் : 10—3—84

# அணிந்துரை

தமிழ்க் கிறிஸ்தவர்கள் என்றென்றும் தலைநிமிர்ந்து நிற்கும் படியாக இலக்கியம், இசை ஆகிய துறைகளில் சிறந்த படைப்புக்களை வழங்கியுள்ள பெரியோர்களுள் வேதநாயகம் சாஸ்திரியார், எச்.ஏ. கிருஷ்ணப்பிள்ளை ஆகியோரோடு தஞ்சை ஆபிரகாம் பண்டிதரும் குறிப்பிடத் தகுந்தவர் என்பதை நாம் அறிவோம். ஆபிரகாம் பண்டிதரின் 125-வது பிறந்த நாள் கொண்டாடப்படுகின்ற இவ் வாண்டில் அவருடைய வாழ்க்கை வரலாற்றையும், பணி மாண்புகளை யும் தொகுத்துத் தரும் வகையில் பேராசிரியர் டி. ஏ. தனபாண்டியன் அவர்கள் இந்நூலை எழுதி வெளியிடுகிறார்கள். இசைத் துறையில் ஆழ்ந்த ஆய்வுகள் நடத்திவரும் இவ்வறிஞர் பண்டிதரின் இசைப் புலமையையும் தமிழ்ப் பற்றினையும் பல்வகையிலும் எடுத்துக் காட்டு வதோடு அவர் எழுதிய அருமையான பாடல்கள் சிலவற்றையும் இந் நூலில் சேர்த்துள்ளார்கள் மருத்துவ ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு 1912-ம் ஆண்டு முதல் 1916 ஆம் ஆண்டு வரையில் ஏழு இசை மாநாடுகளை நடத்திச் சுருதிகள் பற்றிய முடிவுகளையும், **கருணாமிர்த சாகரம்** என்ற நூலையும், பாசுரங்கள் பல அடங்கிய **கருணாமிர்த சாகரத்திரட் டையும்** வெளியிட்ட ஆபிரகாம் பண்டிதர் **நன்மறை காட்டும் நன்னெறி** என்ற நூலினையும் எழுதியுள்ளார். கிறிஸ்தவக் கோட்பாடு களை ஆதாரமாக வைத்து அவர் இந்நூலைப் படைத்துள்ளார் அவர் எழுதியுள்ள அருமையான நூல்கள் இக்காலத் தமிழ் மக்களுக்கும், வருங்காலச் சந்ததியினருக்கும் தகுந்த முறையில் அறிமுகப்படுத் தப்பட வேண்டும். தம்முடைய பாட்டனாரின் ஆய்வுகளை மேலும் மேலும் ஆய்ந்து தெளிந்து அவற்றைத் தமிழ் உலகுக்கு ஒல்லும் வகைகளி லெல்லாம் வழங்கிடும் அரும்பணியை அருட்கலைஞர் - பேராசிரியர் டி. ஏ. தனபாண்டியன் அவர்கள் செய்து வருகிறார்கள். அவர்களுடைய நற்பணியின் திறத்தை எடுத்துக் காட்டும் இந்நூலைத் தமிழ் அன்பர்கள் படித்துப் பயன்பெறுவார்களாக.

**டாக்டர் தி. தயானந்தன் பிரான்சிஸ்**

பாண்டிச்சேரி

தஞ்சை திரு. B. M. சுந்தரம்,
*இசை அமைப்பாளர்,*
*அகில இந்திய ரேடியோ.*

# மதிப்புரை

இசை ஆராய்ச்சி என்றதுமே, அத்துறையில் ஈடுபடுவோருக்குத் தஞ்சை திரு மு. ஆபிரஹாம் பண்டிதர் அவர்களின் நினைவே எழும். நெல்லை மாவட்டத்தில் உதித்து, ஆசிரியராக, மருத்துவ மேதையாக, எண்ணற்ற மக்களுக்கு அருந்தொண்டாற்றிய பண்டிதர் அவர்களைத், தரணிபுகழ் தஞ்சை மண், இணையற்ற இசைப்புலவராக வளர்த்தது.

'கருணானந்தர்' ஸஞ்ஜீவி மாத்திரைகள், கோரோசனை மாத்திரைகள் போன்ற பண்டிதரின் படைப்புகளைக் கொண்டிராத வீடுகள், அந்நாளில், தஞ்சையில் கிடையாது. 'கைகண்ட' மருந்தாகப் போற்றப் பட்டவை அவை மதலைகளின்பால் மாளாத அன்பு, அம்மாமேதைக்கு இருந்த காரணத்தால்தானோ என்னவோ, கணக்கிலடங்கா நன் மாணவமணிகளை உருவாக்கும் நல்லாசிரியப்பணியும், குழந்தைகளுக் கென்றே ஸர்வரோக நிவாரணிகளைத் தயாரித்தளிக்கும் பெருந் தொண்டும் அவரிடம் குடிபுகுந்தன. இசை ஆய்வில் அடியெடுத்து வைக்கும் அத்தனை பேருக்கும், அவரால் எழுதப்பெற்ற 'கருணாமிர்த சாகரம்,' ஒரு ஸஞ்ஜீவி மூலிகையாகும்.

திரு பண்டிதர் அவர்களின் குடும்பத்தோடு நெருக்கமான தொடர்பு எனக்கு உண்டு. ஏன்? இசைத்துறையில் ஈடுபட்ட அனைவருக்கும் தான். அவரது வீட்டிலோ, தோட்டத்திலோ எந்த இசைநிகழ்ச்சி ஏற்பாடானாலும், தவறாமல் எங்களுக்கு அழைப்பு வரும். ஹரிகேசநல்லூர் திரு முத்தையா பாகவதர் அவர்கள், அடிக்கடி அங்குவந்து தங்கும் காலத்தில், தினமும் அங்கு சென்று வருவதும் எங்கள் வழக்கம், கதாகாலட்சேபக்கலை பிறப்பெடுத்த தஞ்சையில், முதன்முதலாக, அவ்வித நிகழ்ச்சியொன்றினைக் கேட்கும் வாய்ப்பு, திரு பண்டிதர் அவர்களின் இல்லத்தில்தான் எனக்குக் கிட்டியது. காலட்சேபம் செய்தவர், பண்டிதரின் குமாரர் டாக்டர் ஜோதிபாண்டியன் அவர்கள். மனுக்குலம் மாண்புற வாழ்ந்திடப். பாடுகளைத் தாமேற்று

மரித்த ஏசுபிரானின் சரிதத்தை, அவரது பிறந்த நாளை முன்னிட்டுச் சுமார் ஒருவார காலம், தொடர் காலட்சேப நிகழ்ச்சிகளாக, அவர்கள் நடத்துவார்கள். பண்டிதர் அவர்களின் உற்ற நண்பரும், காலட்சேபம், மராத்திய 'லாவணி'க் கலைகளில் விற்பன்னருமான, 'சித்திரக்கவி சிவராவ்' அவர்கள் டாக்டர் ஜோதிபாண்டியனுக்குக் காலட்சேபக்கலையைப் பயிற்றுவித்திருந்தார்.

மிக உன்னத நிலையிலிருந்த இசைக் கலைஞர்கள், தஞ்சைக்கு விஜயம் செய்யும்போதெல்லாம், பண்டிதர் அவர்களின் விருந்தாளிகளாகத்தான் தங்குவர். இசைப்புலவர்களைக் கூட்டி வைத்து, இசையின் நுட்பங்களைப்பற்றி. விவாதத்துடன் கூடிய ஆய்வு நடத்துதலே, அவரது அன்றாட அலுவல். 'ஸங்கீத வித்யாஜன சங்கம்' ஒன்றை அமைத்து. வெவ்வேறு ஊர்களிலிருந்தும், உள்ளூரிலிருந்தும், ஏராளமான இசைக்கலைஞர்களை வரவழைத்து, இசைக்கு ஆதாரமாயுள்ள சுருதிகள், அவற்றால் எழுவதும், வேறுபடுவதுமான ராகங்கள் முதலிய பல விஷயங்களைக் குறித்துக் கருத்தரங்குகள் நடத்தியவர் அவர். 1916 ஆம் ஆண்டு, பரோடாவில் கூட்டப்பெற்ற முதலாவது இந்திய இசை மாநாட்டுக்குத், தமிழகத்திலிருந்து இசைக்கலைஞர்களைத் தன் சொந்தப் பொருட்செலவில் அழைத்துச் சென்ற பண்டிதர் அவர்கள் தமது இசை முறையில் இடம் பெற்றவை இருபத்து நான்கு சுருதிகளே எனும் கருத்தை அங்கு வலியுறுத்திப் பேசியும்' நிரூபணம் செய்தும் திரும்பினர். இவ்விஷயம் பற்றிய வாதப் பிரதிவாதங்களை அம் மாநாட்டோடு முற்றுப்புள்ளி வைக்காது, பின்னும், இ. க்ளெமெண்ட்ஸ் ஸி. நாகோஜிராவ், கே பி. தேவால் போன்றவருடன் கடிதங்களின் மூலமும் தொடர்ந்தார்.

பண்டிதர் அவர்கள், நெடுநாளைய இசை ஆய்வின் விளைவாகத் தாம் கண்டறிந்த பல அரிய விஷயங்களைப், பழமையான நூல்கள் பலவற்றினின்றும் மேற்கோட்குறிப்புகளையும் தொகுத்தளித்துக் 'கருணாமிர்த சாகரம்' எனும் ஒப்பற்ற இசைக்கருவூலத்தை எழுதினார். சுமார் அறுபதே ஆண்டுகளைக் கொண்ட ஜீவியகாலத்தில், இத்தனைப் பெரிய அளவில், எண்ணிலடங்கா விளக்கங்களைத் தாங்கிய மாபெரும் நூலொன்றை, எவ்வாறு அவரால் எழுத முடிந்தது என்ற வியப்பு, அந் நூலைக் கண்ணுறுவோருக்கு எழுவது இயற்கை. அந்தப் புத்தகத்தைத் தூக்கவே வலிவு போதாதெனலாம், உள்ளே குவிந்து கிடக்கும் அரிய விஷயங்களை ஜீரணிக்க நமது புத்திக்கு வன்மையிருக்குமாவென்று, எண்ணத்தக்கவாறு, காலத்தாலும் அழிக்காவொண்ணா அதைப் படைத்து, உலகத்துக்கு வழங்கியுள்ளார், ஈடற்ற அத்தமிழ் மகனார்.

தமிழிசை வளர்ச்சிக்கு, முதல் வித்திட்டவர், திரு பண்டிதரே என்றால் அது மிகையாகாது. ஏராளமான தமிழ்ப்பாடல்களைத் தாமே இசையோடு புனைந்தது மட்டுமன்றி, அப்பாடல்களை மீண்டுமொருமுறை பரிசீலிக்குமாறு, 'பாலஸரஸ்வதி' என்ற இசைக்கருவியில் நிபுணராயிருந்த தஞ்சை ஜகந்நாத பட்கோஸ்வாமி போன்ற இசையறிஞர்களைக் கோரியவர் அவர். தமக்கு நண்பராயிருந்த பிற இசைவாணர்களையும், தமிழ்ப் பாடல்களைப் பெருமளவில் கையாளுமாறு வற்புறுத்தி வந்துள்ளார்.

மருத்துவரைக் குறிக்கும் 'பண்டுவர்' என்ற சொல், மருவிப் 'பண்டிதர்' ஆக மலர்ந்ததென, இந்நூலாசிரியர் திரு. தனபாண்டியன் அவர்கள் குறிப்பிடுகிறார். மருத்துவத்திலும், இசையிலும் திரு ஆபிரஹாம் அவர்கள் பெற்றிருந்த பேராற்றலை எண்ணுகையில், 'பண்டிதர்' என்ற அடைமொழியாலேயே, பொருத்தமுற அவர் அழைக்கப் பட்டிருக்கலாமெனத் தோன்றுகிறது. திண்டுக்கல்லில் 'பண்டுவர்' எனப் பெயர் பெற்றுப் பின்பு தஞ்சையில் வாழ்ந்த காலத்தில், அன்னாருடைய அருஞ்சிறப்புகளை உணர்ந்த தஞ்சைமக்கள் 'பண்டிதர்' என்று, அன்போடு அவரை அழைக்கலாயினர் என எண்ணலும் தகும்.

திரு. ஆபிரஹாம் பண்டிதர் அவர்கள், தஞ்சைக்கும், இசைக் கலைக்கும் பெருமையீட்டிய பெருமகனார். இந்திய இசைச் சரிதத்தில், பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டிய அப்பேராளரின் விலைமதிப்பற்ற சேவைதனை, நாடெல்லாம் நன்கறிதல் வேண்டுமென்ற நோக்கத்துடன், அவரது வாழ்க்கைச் சரிதத்தையும், அரும்பணிகளையும் தொகுத்து, ஒரு நூலாக எழுதவேண்டுமென்ற எண்ணம் எனக்கே உண்டு. இதுபற்றி, பண்டிதர் அவர்களின் தவப்பேரரும், இசைப் பேராசிரியருமான, சகோதரர் திரு தனபாண்டியன் அவர்களிடம், போபாலில் நடைபெற்ற சர்வதேச இசை மாநாட்டின்போது, நான் தெரிவித்தேன். தாமே அவ்வித நூலொன்றை எழுதிவருவதாகச் சொல்லி, என்னை மகிழ்ச்சியில் ஆழ்த்தினார் அவர். இன்று, இந்நூல் கண்ணுற்று, பெருமிதங்கொண்டேன். சிறிய அளவிலே இந்நூல் இப்போது வெளிவருவதாயினும், மேலும் விரிவாக, மற்றொருநூல் விரைவில் வெளிவரவிருப்பதை அறியும்போது, என் மகிழ்ச்சி இரட்டிப்பாகின்றது. திரு பண்டிதர் அவர்களின் மருத்துவ, இசைத் தொண்டுகள் பற்றி எழுதப் புகுந்தால், அளவில் அது மற்றொரு 'கருணாமிருத சாகரம்' போல் விரிந்து பெருகும். இருப்பினும், சுருக்கமாக,

அதே நேரத்தில், மிகத்தெளிவாகப் பண்டிதர் அவர்களின் புலமை தனைப், புகழ்விரும்பாப் பணிதன்னைத், தன்னலமற்ற தொண்டினை, யாவரும் நன்கறிந்துணரும் வண்ணம், இந்நூலை அழகுற வடித்திருக்கிறார், திரு. தனபாண்டியன் அவர்கள் கர்நாடக இசையில் புலமை மிகுந்தவரும், இசை ஆய்வில் பெரிதும் ஈடுபட்டவரும், தற்போது தஞ்சை தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் இசைத்துறைத்தலைவராக விளங்குபவருமான திரு. தனபாண்டியன் அவர்கள், ராவ்ஸாஹிப் ஆபிரஹாம் பண்டிதர் அவர்களின் பேரனாவார். பண்டிதரவர்கள் விட்டுச்சென்ற மருத்துவ, இசைச் சேவைகளைப் பாங்குடன், அவரது பிள்ளைகள், பேரப்பிள்ளைகள் என 'வாழையடி வாழை'யாகத் தொடர்ந்திருக்கப், பாட்டனுக்கு ஆற்றும் உதவியாக, இன்று இத்தவப்பேரன், அவரது ஜீவிய சரிதத்தை அருமையாகத் தீட்டியிருக்கிறார்.

திரு. ஆபிரஹாம் பண்டிதர் அவர்களைப் பற்றி எண்ணுகையில், கூடவே இரு இசை வித்தகர்களின் நினைவும் வரும். ஒருவர், ஹரிகேசநல்லூர் திரு. முத்தையா பாகவதர்; மற்றவர், தஞ்சை 'சித்திரக்கவி' சிவராவ்,, நினைத்த மாத்திரத்தில், பதினான்கு மொழிகளில். எதுகை, மோனைகளோடு கூடிய பாடல்புனையும் வரம் பெற்று விளங்கியவர், சிவராவ். ஒரு சமயம், முத்தையா பாகவதர் தஞ்சைக்கு வந்து, வழக்கம்போல், பண்டிதர் அவர்களோடு தங்கியிருந்தார். அதுகாறும் எந்தக் காலட்சேபக் கலைஞராலும் கையாளப் பெற்றிராத, 'வள்ளி கல்யாணம்' என்றப் புதுசரிதத்தை பாகவதர் தயாரித்துள்ள செய்தியைக் கேள்வியுற்ற பண்டிதர் அவர்கள், தன் இல்லத்தில், அந்த நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்தார். காலட்சேபம் சிறப்பாக நடைபெற்று முடிந்ததும், ரஸிகர்கள் குழுவில் இடம் பெற்றிருந்த சிவராவ் அவர்களிடம், 'இப்படியொரு சிறந்த நிருபணம் தயாரிக்க வேண்டுமானால், பாகவதர் எத்தனைக் காலம் சிரமப்பட்டிருக்க வேண்டும்!' என்று பண்டிதர் வியந்து கூறியபோது, 'பாகவருக்கோ, எனக்கோ இதுவொரு பெரிய காரியமா ?' நாளைய தினம் இதே இடத்தில், இதே சரிதத்தை நான் செய்கிறேன், என்றார் சிவராவ். சொன்னவிதமாகவே முற்றிலும் புதிய பாடல்கள்-வர்ணமெட்டுகளோடு, அமர்க்களமாகக் காலட்சேபம் செய்த சிவராவ் அவர்களைப் பண்டிதரும், பாகவதரும் கூடியிருந்த ஏனையோரும் பெரிதும் பாராட்டினார்கள். பண்டிதர் அவர்களது வரலாற்றிலே சிவராவ் அவர்களுடைய சிறப்புகளும் பின்னிப்பிணைந்தவொரு விஷயமாகும்.

திரு பண்டிதர் அவர்கள், இருபத்துநான்கு சுருதிகள்பற்றிக் கூறிய கருத்துக்கள், அவரது பாடல்கள், ராகஸ்புடம் பற்றி அவர் கொடுத்

துள்ள வழிமுறைகள்' ஜோதிடத்தில் அவருக்கிருந்த ஆழ்ந்த அறிவு போன்ற எல்லாச் செய்திகளையும், சுருக்கமாக, ஆனல், விளக்கமாக எழுதியுள்ள திரு. தனபாண்டியன் அவர்களுக்கு, இசையுலகம் என்றும் கடமைப்பட்டதாகும். இசையார்வம் கொண்டோருக்குப் பெரிதும் பயனுறும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது. அவர் எழுதவிருக்கும் விரிவான இசை நூல்கள் பலவும், விரைவில் வெளிவர வேண்டு மென்பது என் ஆவல். அவரது அருந்தொண்டுக்கு என் உளமார்ந்த பாராட்டுக்கள்.

தஞ்சை B. M. சுந்தரம்

மா. சண்முகசுப்பிரமணியன்
தலைவர்
வளர் தமிழ்ப் புலம்
தமிழ்ப் பல்கலைக் கழகம்

தஞ்சாவூர்
நாள்: 17-7-1984

# அணிந்துரை

உலகில் பூதவுடம்பை நீத்தபின் புகழுடம்போடு வாழ்வோர் மிகச் சிலரே ஆவர். அத்தகையோரில் ஒருவர் அமரர் ஆபிரகாம் பண்டிதரவர்கள்.

பொதிகை மலை மணமும் பொன்னி நதி வளமும் பொலிந்து விளங்கும் புலமை நலம் பெற்ற அருளாளர் ஆபிரகாம் பண்டிதரவர்கள் இசைத்தமிழ் அறிவு மக்களிடையே நலிவுற்றிருந்த காலத்தில் அத் துறையில் நுண்ணிய முறையில் ஆராய்ச்சி செய்து அரிய நூல்களை வெளியிட்டு, இன்றைய தமிழிசை இயக்கத்திற்குத் தந்தையாகத் திகழ்ந்தவர் பண்டிதரவர்கள். தம் வாழ்தொழிலான வைத்தியத்தால் வந்த வருமானத்தில் இசைத்தமிழை வளர்த்த வள்ளல் அவர் பக்தியில் சிறந்த பண்பாளர்.

இத்தகைய பெரியாரின் வாழ்க்கை வரலாற்றை இனிய தமிழில் இயற்றித் தந்துள்ளார் தமிழ்ப்பல்கலைக்கழக இசைத்துறைத் தலைவர் பேராசிரியர் டி. ஏ. தனபாண்டியன் அவர்கள். பண்டிதரவர்களின் வழிவந்த அவர் தம் பேரரான பேராசிரியர், பண்டிதரவர்களின் இசைத் தமிழ் ஆராய்ச்சியினை இசைப் புலமையோடு விளக்கியுள்ள சிறப்பு போற்றுதற்குரியது.

இசைத் தமிழில் நாட்டம் கொண்டோரனைவருக்கும் இச்சிறுநூல் இனிய விருந்தாகும் என்பதில் ஐயமில்லை.

**மா. சண்முகசுப்பிரமணியன்.**

# 1

# இளமைப் பருவம்

தமிழகத்தில் பாண்டியநாடு வளம் கொழிக்கும் பொருநை நதியால் பொலிவு பெற்றது - நன் முத்துக்களால் நனி சிறந்தது - இல்லந்தோறும் இனிய தமிழ் மணக்கும் இன்பமுடையது. இத் திருநாடு 1859-ம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் இரண்டாம் நாள் ஒரு பெறற்கரிய அரும் முத்தை தமிழன்னைக்கு ஈன்றளித்தது. ஆம் - தமிழன்னை செய்த தவப் பயனால் தமிழன்பன் ஆபிரகாம், முத்துச்சாமி நாடாருக்கும் அன்னம்மாள் அம்மையாருக்கும் அருந்தவப் புதல்வராகத் திருநெல்வேலி மாவட்டத்தில், தென்காசியை அடுத்த சாம்பவர் வடகரை என்னும் சிற்றூரில் தோன்றினார். முத்துச்சாமி நாடாரின் தந்தை, திரு சுப்ரமணிய நாடார் பதின்மூன்று மக்கட் செல்வங்களைப் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்ந்து வந்தார். அவ்வமயம் திடீரென்று காலரா என்னும் விஷபேதியால் காலன் பதினொருவரைக் கவர்ந்து கொண்டான். ஓர் ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையுமே எஞ்சி நின்றனர். அந்த ஆண் குழந்தையே திரு முத்துச்சாமி நாடார். இத்துன்பத்தால் அளவு கடந்த துயருற்று ஆறுதலின்றித் தவித்த சுப்ரமணிய நாடார், இயேசு நாதரின் அருள் வாக்கினால் ஆறுதலையும் மன அமைதியையும் அடைந்தார். இயேசு நாதரின் அருட் செயல்களும் மீட்பின் செய்தியும் அவருள்ளத்தைக் கொள்ளை கொண்டமையால் தம்மை அவருக்கு அர்ப்பணித்து கிறிஸ்தவ சமயத்தைத் தழுவிக் கொண்டார். பின்பு முத்துச்சாமி நாடார் சாம்பவர் வடகரையை விட்டு சமீபத்திலுள்ள பங்களாச்சுரண்டைக்கு வந்து அங்குள்ள ஆங்கிலப் பாதிரியாரிடம் தோட்டக்காரராகப் பணியாற்றினார். அவருடைய மனைவியார் திருமதி அன்னம்மாள் ஆலயப் பணிகளையும், சிறுவர்களுக்கு வேத பாடங்களைக் கற்றுக் கொடுக்கும் பணியையும் புரிந்து வந்தார்.

## விளையும் பயிர் முளையிலே தெரியும்

ஆபிரகாம் தமது ஆரம்பக் கல்வியைச் சுரண்டையில் முடித்துப் பின்னர் சுரண்டைக்குக் கிழக்கே பன்றிகுளம் என்னும் ஊரிலுள்ள உயர்தர ஆரம்பப் பள்ளியில் படித்தார். இப்பள்ளியில் பயிலும்போது அவர் எல்லாப் பாடங்களிலும் முதன்மையாகத் தேறினார். 1868 முதல் 1870 வரை இங்கே கற்றுத் தேர்ந்து சுரண்டை வந்து சேர்ந்தார். சுரண்டைக்கு வடக்கே திருமலாபுரம் என்னும் அழகிய சிற்றூர் உள்ளது. சுப்ரமணிய நாடாரின் உறவினர் ஒருவர் அங்கு ஒரு தொடக்கப்பள்ளி நடத்தி வந்தார். ஆபிரகாமின் திறமையையும் ஊக்கமான உழைப்பையும் கண்ட அவர், தம் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றும்படி ஆபிரகாமைக் கேட்டுக் கொண்டார். அன்னாரது விருப்பத்திற்கிணங்க ஆபிரகாம் இரண்டு ஆண்டுகள் அப்பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றினார்.

> ''கற்க கசடற கற்பவை கற்றபின்
> நிற்க அதற்குத் தக''

என்னும் பொய்யாமொழிக்கு உதாரணமாக விளங்கித் திறமையுடன் செயலாற்றினார்.

## ஆசிரியப் பயிற்சி

1874-ம் ஆண்டு ஆபிரகாம் திண்டுக்கல்லில் இருந்த நார்மல் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் பயிற்சி பெறும் பேறு பெற்றார். அவ்வமயம் அப்பள்ளியின் தலைவராக அருட்திரு யார்க் (Rev. York) துரை பணியாற்றினார். ஆபிரகாம் கல்வியிற் சிறந்து விளங்கியமையால் ஆசிரியப் பயிற்சி (Special Upper Primary and Normal Training) வகுப்பில் முதன்மையாகத் தேறினார். ஆபிரகாமின் அறிவாற்றலைக் கண்ட யார்க் துரை, உடன்அவரைத் தமது மாதிரிப் பள்ளியில் ஆசிரியராக நியமித்தார்.

ஆபிரகாம் தமது மாணவர்களிடம் மிகவும் அன்புடன் பழகி வந்தார்.

> ''ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும்''

ஏனும் கருத்தை மாணவர்கள் உள்ளத்தில் பதிய வைப்பதே அவருடைய நோக்கமாயிருந்தது. எனவே ஒழுக்கத்தின் சிறப்பையுணர்த்தும் பலவிதமான கதைகளை அவர் மாணவர்களுக்குச் சொல்வது வழக்கம். இதனால்

மாணவர்கள் அவரிடம் மிகவும் பிரியமுடன் பழகி, அவரைக் 'கதை உபாத்தியாயர் என்று அன்புடன் அழைத்து வந்தனர். இத்துடன் ஆபிரகாம் சக ஆசிரியர்களின் நட்பையும் பள்ளி மேற்பார்வையாளர்களின் நன் மதிப்பையும் பெற்றிருந்தார். பள்ளிக்கு வேண்டிய தேசப் படங்கள், ஓவியங்கள் முதலியவற்றைத் தாமே தயாரித்து பள்ளியை அலங்கரித்தார். ஓய்வு நேரங்களில் பலவிதமான நூல்களைப் படிக்கத் துவங்கினர். உழைப்பையும் விடாமுயற்சியையும் மூலதனமாகக் கொண்டு தம் அறிவை மேலும் மேலும் விருத்தியாக்கினர். 'முயற்சி திருவினையாக்கும்' அன்றோ !

## பல்வேறு துறைகளில் நாட்டம்

### புகைப்படம்

நார்மல் ஆசிரியப் பணியை நிர்வகித்து வந்த அருட்திரு யார்க் துரையவர்கள் புகைப்படம் பிடிப்பதில் திறமை பெற்றிருந்தார். அவர் ஆபிரகாமின் புத்திக் கூர்மையையும் சிறந்த பண்புகளையும் திறமையையும் கண்டு அவருக்குப் புகைப்படம் பிடிப்பதற்குக் கற்றுக் கொடுத்தார். நாளடைவில் ஆபிரகாம் புகைப்படக் கலையின் நுட்பங்களை அறிந்து அக் கலையில் நல்ல தேர்ச்சி பெற்ருர்.

பிற்காலத்தில் அவர் தமக்கென்று ஒரு புகைப்படக் கருவி வாங்கிப் பல படங்களை எடுத்து இக்கலையில் புகழ் பெற்ருர். இதன் காரணமாக 1909ம் ஆண்டு அவர் லண்டனிலுள்ள அரசு கலைச் சங்கத்தின் அங்கத்தினர் (Member of the Royal Society of Arts, London) ஆகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பது குறிப்பிடத் தக்கது.

### அச்சுத் தொழில்

திண்டுக்கல்லில் திரு. கந்தசாமிப் பிள்ளை என்பவர் அச்சகம் நடத்தி வந்தார். அந்நாட்களில் அச்சுக்கூடம் என்பது காண்பதற்கு அரிதாக இருந்தது. கந்தசாமிப் பிள்ளையின் அச்சகத்திற்குச் சென்ற ஆபிரகாம் அங்கிருந்த அச்சு இயந்திரங்களைக் கண்டு பிரமிப்படைந்தார். அங்கு நடைபெற்ற அலுவல்களை ஆராய்ந்தறிந்தார். இவ் அறிவு பிற்காலத்தில் அவர் ஒரு சிறந்த அச்சுக் கூடத்தை நிறுவ அடிகோலியது.

1912-ம் ஆண்டு தஞ்சையில் மின் விசையால் இயங்கும் முதல் அச்சகமாக லாலி அச்சகம் என்ற மிகவும் பெரிய அச்சகத்தை அவர்

நிறுவினர் என்பதையும். அச்சகத்திற்கு 9 குதிரை வேகமுள்ள gas engine ஒன்றை ஸ்தாபித்து அதினின்று மின்விசை உற்பத்தி செய்து பல மின் விளக்குகளையும் அமைத்து சிறந்த முறையில் அச்சுப் பதிக்கும் பணிகளை நிறைவேற்றினர்- என்பதையும் இவ்விடம் குறிப்பிடாமல் இருக்கவியலாது.

### சோதிடம்

திரு கந்தசாமிப் பிள்ளை சோதிடத்தில் மிகவும் நிபுணராக விளங்கினர். அவரிடம் அடிக்கடி சென்ற ஆபிரகாம் சோதிடத்தையும் கற்றுக்கொண்டார். இது பிற்காலத்தில் தஞ்சையில் ''ஜோதிட விமர்சினி சபை'' ஒன்றை அவர் ஏற்படுத்தவும் அதற்குத் தலைமை வகித்து அதைச் சிறப்புடன் நடத்தி வரவும் அவருக்கு உறுதுணையாயிற்று. மேலும் இசைத்தமிழ் ஆராய்ச்சியை அவர் மேற்கொண்ட போது இசைக் கலைக்கும் சோதிடத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பை அவர் அறிந்து கொள்ளவும் பேருதவியாக இருந்தது.

### இசைத்துறை

ஆபிரகாம் சிறு வயதிலேயே இசையில் மிக்க ஆர்வம் கொண்டவராக விளங்கினர். பல பாடல்களைத் தாமே இயற்றிப் பாடும் திறமை பெற்றிருந்தார். எனினும் இசையை முறையாகப் பயில வேண்டுமென விரும்பினர். பிடில் வாசிக்கக் கற்றுக்கொள்ள பெரிதும் ஆசித்தார். எனவே அக்காலத்தில் திண்டுக்கல்லில் இசையில் தேர்ச்சி பெற்று விளங்கிய பிடில் வித்வான் சடையாண்டிப் பத்தரிடம் சென்று, சரளி வரிசை, அலங்காரம். கீதம், கீர்த்தனைகள், வர்ணங்கள் முதலியவைகளைக் கற்றுத் தேர்ந்தார். இளமையில் அவர் பெற்ற இசைப் பயிற்சி பிற்காலத்தில் அவர் இசையாராய்ச்சியில் ஈடுபடப் பெரிதும் பயன்பட்டது.

1879-ம் ஆண்டு பள்ளி வருட முடிவில் அருட்திரு யார்க் துரை அவர்களும், அவரது மனைவியாரும் இங்கிலாந்து தேசத்திற்குப் பயணமானர்கள். ஆபிரகாம், துரையவர்கள் பேரிலும் அவரது மனைவியார் பேரிலும் பாடல்கள் இயற்றி அவற்றிற்கு இசையமைத்து, அவற்றைத் தம் மாணவர்களுக்குக் கற்றுத் தந்து அவர்கள் பாடும்படியாக ஏற்பாடு செய்தார். தாமும் சில பாடல்களைப் பாடி யார்க் துரை தம்பதிகளை மகிழ்வித்தார். துரையவர்கள், ஆபிரகாமின் சங்கீத ஞானத்தையும் திறமையையும் கண்டு பெரு வியப்புற்ருர்.

அத்துடன் ஆபிரகாம் தம்பால் கொண்டுள்ள அன்பினை எண்ணி மனம் மகிழ்ந்து, தமது ஞாபகார்த்தமாக ஒரு வயலின் வாத்தியத்தை அவருக்கு வழங்கி இன்புற்றார். ஆபிரகாமும் யார்க் துரை அளித்த வாத்தியத்தை மிகவும் மதித்து அதைப் பயன்படுத்தியும் பாதுகாத்தும் வந்தார்.

## மருத்துவம்

ஆபிரகாம் இசைத் துறையில் ஆர்வம் கொண்டது போலவே மருத்துவத்திலும் மிகுந்த ஆர்வம் கொண்டவராக இருந்தார். தம்மிடம் வருகிற நோயாளிகளுக்குத் தமக்குத் தெரிந்த மூலிகைகளினாலும் மருந்துகளினாலும் மருத்துவம் செய்து வந்தார். திண்டுக்கல்லிலிருந்து பழனிக்குச் செல்லும் சாதுக்கள் ரிஷிகள் பரதேசிகள் ஆகியோரைச் சந்தித்து மருத்துவம் சம்பந்தமாக அவர்கள் தெரிவித்த அனுபவ உண்மைகளைக் கவனமாய்க் குறித்து வைத்துக் கொண்டார். தமது ஓய்வு நேரங்களில் இம்மருந்துகளைச் செய்து பார்த்தும், அவைகளின் பலன்களை அறிந்தும் வந்தார். மக்களின் பிணி தீர்க்கும் பணியில் அளவிலா ஆர்வம் கொண்டு ஆபிரகாம் உழைத்து வந்தமைக்கு மக்கள்பால் அவர் கொண்ட அன்பே காரணம் என்று சொல்லலாம்.

இங்ஙனம் இளமையிலேயே ஆபிரகாம் தாம் ஈடுபட்ட எல்லாத் துறைகளிலும் அயராத ஆர்வங் காட்டித் தளராத உழைப்பை ஈந்து சீரிய சிறப்புடன் விளங்கினார்.



# 2

# இல்லறமாகிய நல்லறம்

''அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.''

1882-ம் ஆண்டு டிசம்பர் மாதம் பள்ளி விடுமுறைக் காலத்தில் ஆசிரியர் **ஆபிரகாம்** தம் சொந்த ஊராகிய பங்களாசுரண்டைக்கு வந்தபோது, அவரது பெற்ருேர் தம் மகனுக்குத் திருமணம் செய்து வைக்க விரும்பினர்கள். எனவே திருநெல்வேலிக்கு வடக்கேயுள்ள நாஞ்சான்குளம் என்னும் சிற்றூரில் வசித்த திரு வேதக்கண்நாடார் அவர்களின் புதல்வியாகிய செல்வி **ஞானவடிவு பொன்னம்மாள்** என்னும் அழகும், அறிவும், அருங்குணங்களும் ஒருங்கே அமையப் பெற்ற பெண்மணியை 27—12—1882ல் மணம் செய்துவைத்து மனம் மகிழ்ந்தார்கள். விடுமுறை நாட்கள் முடிந்ததும் மணமக்கள் திண்டுக்கல் வந்து இனிதே இல்லற வாழ்க்கையை ஆரம்பித்தனர்.

### தஞ்சைக்கு வருதல்

திருமதி ஞானவடிவு பொன்னம்மாள் உயர்நிலை ஆசிரியப் பயிற்சி (Secondary grade training) பெற்றிருந்தார். அந்நாட்களில் பெண்டிர் இத்தகைய உயர் கல்வி பெற்றிருப்பது அரிதன்ருே ! திண்டுக்கல்லில் ஆபிரகாமுடன் ஆசிரியப் பணி ஆற்றியவரும் தஞ்சைக்கு வந்து பட்டப் படிப்புப் படித்துக் கொண்டிருந்தவருமாகிய திரு ஞானமுத்து, ஆபிரகாம் தம்பதிகளைத் தஞ்சைக்கு வரும்படி வருந்தியழைத்தார். தஞ்சையில் இருவருக்கும் ஒருங்கே பணியாற்ற வாய்ப்பு கிடைக்கும் என்ற நம்பிக்கையில் ஆபிரகாம் தம்பதிகள் தமிழும் இசையும் தழைத்தோங்கிய தஞ்சைக்கு வந்துசேர்ந்தனர்.

தஞ்சை வந்த ஆபிரகாம் தம்பதிகள் அருட்திரு பிளேக் (Rev. W. H. Blake) துரையவர்களைச் சந்தித்தனர். துரையவர்கள்

இவர்கள் மீது அன்பு கொண்டவராய் பூக்கடைப் பள்ளி எனப்படும் சீமாட்டி நேப்பியர் பெண் பாடசாலையில் (Lady Napiers Girls School) திருமதி ஞானவடிவு பொன்னம்மாள் அம்மையாரைத் தலைமை ஆசிரியையாகவும் ஆபிரகாம் அவர்களைத் தமிழ்ப் பண்டிதராக-வும் நியமித்தார். இருவரும் அங்கே பணியாற்றத் துவங்கியவுடன் ஒரு பெரும் மாறுதல் ஏற்பட்டது எனலாம். இருவரும் பிள்ளைகளுக்குப் பாடங்களைச் சிறந்த முறையில் கற்றுக் கொடுத்தது மட்டுமின்றி அவர்களைத் தெய்வ பக்தியிலும், நல்வழியிலும் நடத்தி தங்கள் அயராத உழைப்பினால் பள்ளிக்குப் பெருமை தேடித் தந்தனர். அதிகமான பிள்ளைகள் இப்பள்ளியில் பயில வந்தனர். பள்ளியில் இடவசதி குறைவுபட்டதால் பிளேக் துரையவர்கள் திரு ஜம்புநாத காண்டே என்பவரின் பெரிய வீட்டை 1884-ம் ஆண்டு வாடகைக்கு அமர்த்திக் கொண்டு அங்கு இப் பள்ளியை நடத்தி வந்தார். நாளுக்கு நாள் இப் பள்ளியின் புகழ் வளர்ந்தோங்கியது. இங்ஙனம் ஆபிரகாமும் அவரது மனைவியாரும் ஆறு ஆண்டுகள் இப் பள்ளியில் அரும் பணியாற்றினர்.

1890-ம் ஆண்டு அருட்திரு W. H. பிளேக் துரையவர்கள் தங்கள் தாய்நாடான இங்கிலாந்து தேசத்திற்குப் பயணமானார். அச்சமயத்-திலிருந்து ஆபிரகாமும் அவரது மனைவியாரும் தங்களுடைய ஆசிரியப் பணியை விட்டுவிட்டு **'கருணானந்தர் சஞ்சீவி மருந்துகளைப்'** பெருமள-வில் தயாரித்து, மக்களின் பிணி தீர்க்கும் பணியை மேற்கொண்டனர்.

## ஆபிரகாமின் அருங்குணங்கள்

ஆபிரகாம் அவர்கள் ஈடிணையற்ற அறிவாற்றலைப் பெற்றிருந்தது மட்டுமின்றி ஆன்றோர் போற்றும் அருங் குணங்களையும் ஒருங்கே பெற்றிருந்தார் என்பது பெருமைக்குரியது. அவர் வாழ்வில் ஒழுக்கம் முதன்மையான இடத்தைப் பெற்றிருந்தது. அவர் தமது பிள்ளைகளையும் அவ்வாறே சீரிய ஒழுக்கத்தில் சிறந்த கண்டிப்புடன் வளர்த்தார் என்பது உண்மை. சுற்றத்தாரைத் தாங்கும் சிறந்த பண்பு அவரிடம் இணையற்று விளங்கியது.

'இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பந் துடைத் தூன்றுந் தூண்'

எனும் வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப, அவர் தம்முடைய கடின உழைப்பாலும் இறைவனுடைய அருளாலும் மிகுந்த செல்வச் செழிப்பை அடைந்தபோது, தூர இடங்களில் இருந்த தம் சுற்றத்தார்

அனைவரையும் தம்மிடம் வரவழைத்து அவர்கட்கு ஏற்ற அலுவல்களைக் கொடுத்து அவர்களைத் தம் அருகிலேயே வைத்து அன்புடன் பராமரித்து வந்தார். தம் பிள்ளைகளையும் தம் உறவினர் பிள்ளைகளை-யும் அவர் ஒன்றுபோல் நேசித்து வளர்த்து வந்தார். உணவு, உடை போன்ற எல்லாக் காரியங்களிலும் அவர் ஒரு சிறிதும் வித்தியாசம் பாராட்டாமல் யாவருக்கும் ஒரே விதமாக அவற்றை அமைத்து அன்பு பாராட்டினார். அனைவருக்கும் இளம் வயதிலேயே இசைப் பயிற்சி அளிக்கப்பட்டது. ஏழைகள் பால் இரக்கம் காட்டும் இனிய பண்பும் அவரிடம் காணப்பட்டது. ஆபிரகாம் தமிழ்ப்பற்று மிக்கவர். அவரது பேரரான காலஞ்சென்ற டாக்டர் ஏ. எஸ். தவபாண்டியன் தம் நூலில் ''தமிழன்பன் ஆபிரகாம்'' என்று அவரை அழைக்கின்றார். தமிழிசைச் செல்வர்களையும், புலவர் பெருமக்களையும் ஆதரித்த வள்ளல் அவர் என்று கூறின் அது மிகையாகாது. அத்துடன் தெய்வ பக்தியிலும் அவர் சிறந்து விளங்கினார் என்பதைப் பின் வரும் அத்தியாயத்தில் காணலாம். தம் வாழ்க்கையில் ஒரு நாளையாவது கடின உழைப்பின்றி அவர் வீணாக்கியதில்லை. இவ்விதமாய்ப் பெறற்கரிய நற்பண்புகளைப் பெற்றிருந்த பண்டிதருக்கு ஏற்ற வகையில் அவரது துணைவியாரும் அமைந்திருந்தார்.

## இல்லாளின் இனிய பண்புகள்

ஆபிரகாமின் மனைவியார் திருமதி ஞானவடிவு பொன்னம்மாள் அன்பும், அடக்கமும் உடையவராய், ஆபிரகாமிற்கு உறுதுணையாய் இருந்து, உதவி செய்துவந்தார். ஆபிரகாம் மருத்துவம், விவசாயம், இசை போன்ற பல துறைகளிலும் பணியாற்றி வந்தமை-யால், மருத்துவத் தொழில் முழுவதையும் அம்மையாரே கவனித்து வந்தார்கள். தம் கணவரின் குடும்பத்தாரையும், தம் குடும்பத்தைச் சேர்ந்தவர்களையும் தம்முடன் வைத்து உபசரித்து உதவி செய்யும் சிறந்த பண்புடையவர்களாக விளங்கினார்கள். அம்மையாரின் விடா முயற்சியினாலும், சிறந்த தெய்வ பக்தியினாலும் குடும்பம், செல்வத்தில் மேலும் மேலும் செழிப்புற்றோங்கியது. இவர்கள் காலத்தில் நன்செய், புன்செய் முதலியவைகள் வாங்கப்பெற்று, ''கருணானந்தபுரம்'' என்ற தோட்டமும் அமைக்கப்பட்டது. லாலி அச்சகமும் அமைக்கப் பெற்றது. தம் பிள்ளைகளின் திருமணங்களையும் சிறப்புடன் நடத்தி நற்புகழ் பெற்றார்கள்.

அம்மையார் வாழ்வில் நடைபெற்ற ஒரு சம்பவம் சொல்லப் பட்டுள்ளது. ஒரு கோடையில் தஞ்சையில் மழையின்றி பயிர்களும்

கால்நடைகளும் வாடி, மக்கள் தண்ணீருக்காகத் தவித்த போது, அம்மையார் தம் குடும்பத்தாருடன் சாப்பிடாமல் பக்திப் பாடல்களைப் பாடி இறைவனின் அருளை வேண்டிநின்றார்கள். இதன் பயனாக உடனடியாக மழை பொழிந்து பூமி குளிர்ந்தது. மக்களின் குறையும் தீர்ந்தது. அம்மையார் எவ்வாறு தெய்வ பக்தியில் சிறந்து விளங்கினார்கள் என்பதை இச்சம்பவம் விளக்கிக் காட்டுகிறது.

'தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை''

என்ற குறளுக்குத் திருமதி ஞானவடிவு பொன்னம்மாள அம்மையாரே உதாரணமாகத் திகழ்ந்தார்கள்.

**பிள்ளைகள்**

திருமதி பொன்னம்மாள் இரண்டு குமாரர்களையும் நான்கு குமாரத்திகளையும் பெற்றெடுத்தார். மூத்த குமாரத்தியின் பெயர் செல்வி **அன்னபூர்ணவல்லி,** இரண்டாவது குமாரத்தியின் பெயர் செல்வி **சௌந்தரவல்லி,** மூத்த குமாரரின் பெயர் திரு **சுந்தர பாண்டியன்,** மூன்றாவது குமாரத்தியின் பெயர் செல்வி **ஆனந்த வல்லி,** இரண்டாவது குமாரரின் பெயர் திரு **ஜோதிபாண்டியன்,** நான்காவது குமாரத்தியின் பெயர் செல்வி **மரகதவல்லி.**

குடும்பத்தின் திருவிளக்காகத் திகழ்ந்த அம்மையார் 1911-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 15-ம் தேதி இவ்வுலக வாழ்வை விட்டு இறைவனின் பிரசன்னத்தில் இருக்கும் பேறு பெற்றார்கள். தம் ஆருயிர்த் துணைவியை இழந்த பண்டிதர் கண்ணீர் சிந்திக் கலங்கினார். அம்மையாரின் சரீரம் கருணானந்தபுரம் தோட்டத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

**இரண்டாவது துணைவியார்**

**கோயில் பாக்கியம் அம்மாள்** என்னும் பெண்மணியை ஆபிரகாம் இரண்டாவது துணைவியராக மணந்து கொண்டார். இவர் இரு குமாரர்களையும், இரண்டு குமாரத்திகளையும் பெற்றெடுத்தார். மூத்த குமாரர் திரு **வரகுணபாண்டியன்,** இரண்டாவது குமாரர் திரு **சௌந்தரபாண்டியன்,** குமாரத்தியர் செல்வி **கனகவல்லி**

செல்வி மங்களவல்லி, ஆவர். திருமதி கோயில் பாக்கியம் அம்மை-யார் ஆபிரகாம் அவர்களின் இசையாராய்ச்சியில் பெரிதும் உதவியாக இருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

ஆபிரகாம் அவர்களின் பிள்ளைகள் அனைவரும் அவரைப் போலவே அறிவிலும் ஆற்றலிலும் சிறந்து விளங்கினர். இன்றும் அன்னாரது பரம்பரையினர் இசைத்துறையிலும் மருத்துவத் துறையி-லும் அளவற்ற ஈடுபாட்டுடன் பணிபுரிந்து வருவதே இதற்குச் சான்றாகும்.

இங்ஙனம் ஆபிரகாம் அவர்களின் குடும்ப வாழ்க்கை நல்லோர் போற்றும் நல் வாழ்க்கையாகவே விளங்கியது என்பதில் ஐயமில்லை.



# 3

# பிணி தீர்க்கும் பணி

ஆபிரகாமுக்கு இயற்கையாகவே மருத்துவத் துறையில் மட்டற்ற ஆர்வம் இருந்தது. அவர் திண்டுக்கல்லில் ஆசிரியராகப் பணியாற்றும் போதே மருத்துவ முறைகள் கொண்ட ஏட்டுச் சுவடிகளைச் சேகரித்து, அவற்றை ஆராய்ந்து, அவற்றில் கூறப்பட்டுள்ளபடி, முறையுடனே மருந்துகளைத் தயாரித்து, அவற்றை நோயுற்று வாழும் எளியோர்க்கும் நண்பர்களுக்கும் கொடுத்து வந்தார். இந்த மருந்துகள் எதிர்பார்த்தபடியே நல்ல பலனை நல்கின. எனவே இத்துறையில் மேலும் மேலும் வெற்றி காண வேண்டும் என்ற பேரவா அவருக்குண்டாயிற்று. இதன் காரணமாக, திண்டுக்கல்லிலிருந்து பழனிக்குச் செல்லும் சாதுக்கள் ரிஷிகள் ஆகியோரைச் சந்தித்து, அவர்களுடன் அளவளாவி சித்த மருத்துவத்தின் சிறப்புகளையும் அதன் சீரிய குணங்களையும் பல உண்மைகளையும் அவர் அறிந்து கொண்டார். மூலிகைகளின் குணமாக்கும் தன்மையைக் கண்டறிந்து, அவற்றை உபயோகித்து, பலவாறான நோய்களைப் போக்கிய பழந்தமிழ் மக்களின் மாண்பினை எண்ணி எண்ணி வியந்தார். இவ்வைத்தியத்தின் மூலமாகத் தீராத நோய்களையும் தீர்க்க முடியும் என்று அவர் கண்டார். எனவே சித்த மருத்துவம் அவர்தம் சிந்தனையைக் கவர்ந்தது.

**பண்டுவர்**

நாட்கள் செல்லச் செல்ல ஆசிரியர் ஆபிரகாம் சித்த மருத்துவத்தில் சிறந்த அறிவும் அனுபவமும் பெற்று விளங்கினார். முயற்சி மெய் வருத்தக் கூலி தரும் அல்லவா ? அவர் அளித்த மருந்துகள் மக்களின் பிணி நீக்கி நலம் தந்தமையால் அங்குள்ள மக்கள் அவரைப் **'பண்டுவர்'** என்று அன்புடன் அழைக்கலாயினர். வைத்தியரைப் 'பண்டுவர்' என்று அழைப்பது பாண்டிய நாட்டு வழக்கம். நாளடைவில் இது மருவி **''பண்டிதர்''** என்ற சிறப்புப் பெயர் அவருக்கு ஏற்பட்டது.

## சுருளி மலைக்குச் செல்லல்

திண்டுக்கல்லுக்கு அருகில் உள்ள ஆனைமலையம்பட்டியில் திரு பொன்னம்பல நாடார் என்பவர் வசித்து வந்தார். இப் பெரியவர் வைத்தியம் இரசவாதம் முதலியவைகளில் சிறிது அனுபவம் பெற்றிருந்தார். அன்னாரின் குமாரர்கள் திண்டுக்கல் மாதிரிப் பள்ளியில் கல்வி பயின்று வந்தனர். பிள்ளைகளும் மற்றவர்களும் ஆபிரகாமைப் பற்றிச் சிறப்பாகச் சொல்வதைக் கேட்டு அவரைச் சந்திக்க விழைந்தார் திரு பொன்னம்பல நாடார். எனவே ஆபிரகாமின் இல்லத்திற்குச் சென்று அவரைச் சந்தித்துப் பெரு மகிழ்வு எய்தினர். அதன் பின்னர், அடிக்கடி அவரிடம் சென்று சித்த மருத்துவம் பற்றி உரையாடிப் பயனடைந்தார். ஆபிரகாமின் பேரில் அவர் ஆழ்ந்த அன்பு கொண்டவராகி, கோடை விடுமுறை நாட்களைத் தம் இல்லத்திலேயே கழிக்க வேண்டுமென்று அவரை வேண்டிக் கொண்டார். அவரது விருப்பத்திற்கிணங்கி ஆபிரகாமும் திரு பொன்னம்பல நாடாரின் இல்லத்தையடைந்தார். ஆபிரகாம் அங்கு தங்கிய நாட்களில் சில அபூர்வமான மருந்துகளைத் தயாரிக்கும் விதத்தையும், பஸ்பம், செந்தூரம், சுன்னம் போன்றவற்றைச் செய்யும் முறைகளையும், புடமிடும் விதத்தையும் நாடாருக்குக் காண்பித்தார். இவற்றில் இன்பமுற்ற நாடார், பண்டிதரின் பெருமையையுணர்ந்தவராய், அவரைச் சித்தர்கள் முனிவர்கள் ஆகியோர் தங்கியிருக்கும் சுருளி மலைக்கு அழைத்துச் செல்ல விரும்பினர். எனவே தம் நண்பர் சிலரையும் ஆபிரகாமையும் அழைத்துக் கொண்டு சுருளி மலைக்குப் புறப்பட்டார். மலைக்குச் செல்லும் வழி இயற்கையன்னையின் எழிற் கூடமாக இலங்கியது. அம்மலையோ, இன்பந்தரும் கனி மரங்களும் இனிய மணங்கமழும் மூலிகைகளும் இன்னிசையுடன் சலசலக்கும் நீரோடைகளும் நிறைந்து காண்போர் கருத்தைக் கவரும் வண்ணம் விளங்கியது.

## கருணானந்த மகரிஷி

சுருளி மலையை யடைந்தவுடன் அங்குள்ள ஒரு சிறு மண்டபத்தில் அனைவரும் இளைப்பாறினர். அச்சமயம் அங்கே வந்த ஒரு சாது ஆபிரகாமைத் தனியே அழைத்துச் சென்றார்; துறவியாரின் பின்னே சென்ற ஆபிரகாம் ஒரு நீரோடையின் கரையில் சந்தன மர நிழலில், பொன் மேனியுடனும், முகப் பிரகாசத்துடனும் வீற்றிருந்த கருணானந்த மகரிஷியைக் கண்டார். அவரது பாதங்களை வணங்கி அச்சத்தாலும் ஆச்சரியத்தாலும் பேச நா வெழாமல் நின்றார். கருணானந்தர் ஆபிரகாமின் பேரில் அன்பு கொண்டவராய், "குழந்தாய் உனக்கு என்ன வேண்டும்? தேவையானதை யாம்

தருவோம்'' என்று கூற, ''தங்களது ஞான உபதேசம் பெற்றால், நான் புனிதனாவேன்'' என்று பயபக்தியுடன் ஆபிரகாம் கூறினார். குருநாதர் மகிழ்ச்சியுடன் ''உன் விருப்பப்படியே அடிக்கடி என்னிடம் வந்து உபதேசம் பெற்றுக் கொள்வாயாக'' என்று மொழிந்தார். ''வேறு உனக்கு என்ன வேண்டும்? '' என்று குருநாதர் மறுபடியும் வினவவே, ஆபிரகாம் ''மக்கள் பலவிதமான கொடிய நோய்களாலும், பாம்புக் கடியினாலும் துன்பப்படுவதைக் கண்டு, இவை யாவற்றிற்கும் ஓர் அருமருந்து இருந்தால் மக்கள் பிணி நீங்கி நன்மை பெறலாமே என்று வெகுநாட்களாக யான் விரும்பியதுண்டு. எனவே தங்களது அருளால் சகல நோய்களும் நீங்கக் கூடிய ஒரு மருந்து கிடைக்கப் பெற்றால் யான் மிகுந்த புண்ணியம் பெற்றவனாவேன்'' என்று பதிலிறுத்தார். ஆபிரகாமின் கருணையுள்ளத்தைக் கண்ட குருநாதர் அங்ஙனமே அநேக மருந்துகளின் செய்முறைகளை ஆபிரகாமுக்குச் சொல்லிக் கொடுத்தார். பண்டிதர் மகரிஷி கூறிய செய்முறைகளைக் குறித்துக்கொண்டு, அவரை வணங்கி விடை பெற்றார். திரு பொன்னம்பல நாடாரும் மற்றோரும் ஆபிரகாம் பண்டிதரால் சித்த வைத்தியம் சிறப்புற்று விளங்கும் என்று மகிழ் வெய்தினார்.

## கருணானந்தர் சஞ்சீவி மருந்துகள்

1877-ம் ஆண்டு முதல் அருள்மிகு கருணானந்த மகரிஷியால் கிடைக்கப் பெற்ற, உயிர் காக்கும் அற்புத குணம் வாய்ந்த மருந்துகளைக் கொண்டு ஆபிரகாம் பண்டிதர் மருத்துவப் பணி புரியத் தொடங்கினார். மகரிஷிக்குத் தம் நன்றியைத் தெரிவிக்கும் வகையில் தாம் தயாரித்த மருந்துகளுக்குக் ''கருணானந்தர் சஞ்சீவி மருந்துகள்'' என்று பெயரிட்டு மக்களுக்கு அளித்து வந்தார். பாலர் முதல் முதியோர் வரை யாவருக்கும் இம்மருந்துகள் பெரிதும் பயன்பட்டன. மக்கள் தாம் பெற்ற நற்சுகத்தை மற்றவர்களுக்கு எடுத்துக் கூறினர். ஆபிரகாம் பண்டிதர் தம் விடுமுறை நாட்களிலெல்லாம் சுருளி மலைக்குச் சென்று தம் குருநாதரைக் கண்டு மருந்துகள் பற்றிய மேலும் பல அரிய விஷயங்களைத் தெரிந்து கொண்டார்.

## தஞ்சையில் மருத்துவப் பணி

தஞ்சையில் குடியேறிய பின்பு, 1890ம் ஆண்டு ஆபிரகாமும் அவரது மனைவியாரும் தங்களது ஆசிரியப் பணியை விட்டு விட்டு, கருணானந்தர் சஞ்சீவி மருந்துகளைப் பெருமளவில் தயாரித்து மக்களின் பிணி தீர்க்கும் பணியில் முழுமையாக ஈடுபட்டனர். தஞ்சை நகருக்கு மேல்புறமுள்ள நிலத்தைப் பண்டிதர் விலைக்கு வாங்கி, அங்கு ஒரு விவசாயப் பண்ணையை நிறுவினார். இப்பண்ணையின் ஒரு பகுதியில்

மருந்துகள் தயார் செய்வதற்குத் தேவைப்படும் பல அரிய மூலிகை களையும் அவர் பயிரிட்டார். 1894ம் ஆண்டு நல்லதொரு மனையை விலைக்கு வாங்கி அங்கே குடியேறினர்.

1898ம் ஆண்டில் இந்தியாவின் மலைவாசஸ்தலங்களிலும் மலையடி வாரமுள்ள நகரங்களிலும் குறிப்பாகக் கோயமுத்தூர், மைசூர் பகுதி களிலும் பிளேக் என்னும் தொத்துநோய் பரவியது. இக்கொடிய கொள்ளை நோய்க்குப் பரிகாரம் தரக் கூடிய மருந்துகள் எதுவுமே அக் காலத்தில் இல்லை என்று கூறலாம். ஆபிரகாம் பண்டிதர் தயாரித்த செந்தூர சஞ்சீவி மாத்திரையும், வெளிப் பிரயோகத்திற்கான கார மாத்திரையும் இவ்வியாதியினல் அல்லலுற்றோருக்கு உடனடியாக நல்ல குணம் அளித்தன. ஏராளமானோர் இம் மருந்துகளை வாங்கிப் பயனடைந்தார்கள். இதன் விளைவாகப் பண்டிதருக்கு மிகுந்த செல்வ மும் நற்பெயரும் ஏற்பட்டன. இதே போல பண்டிதர் தயாரித்த சமய சஞ்சீவி என்னும் மருந்து காலரா என்னும் விஷபேதிக்குச் சிறந்த மருந்தாக விளங்கியது. காலரா நோய்க் கிருமிகளைக் கொல்லும் சக்தி வாய்ந்ததாக இம்மருந்து விளங்கியதால் ஆயிரக் கணக்கானோர் உயிர் பிழைத்தனர். சளி, இருமல், மாந்தம், சன்னி போன்ற நோய்களால் துன்புறும் குழந்தைகளுக்குப், பண்டிதர் தயாரித்த சஞ்சீவி கோரோசனை மாத்திரைகளும் சஞ்சீவித் தைலமும் மிகவும் பயன் தருவனவாக இருந்தன. மற்றும் பலவிதமான லேகியங்களையும், பற்களைப் பாது காக்கும் தந்த சஞ்சீவி சூரணத்தையும் பண்டிதர் தயாரித்தளித்தார். பாரதம் மட்டுமல்லாமல், ஸ்ரீலங்கா போன்ற பல அண்மை நாடுகளி லுள்ள மக்களும் இம்மருந்துகளை உபயோகித்துப் பயனடைந்தனர். அந்நாட்களில் கருணனந்தர் சஞ்சீவி மருந்துகள் பரவி இருந்த அளவு வேறு மருந்துகள் எவையுமே பரவவில்லை என்று சொன்னல் அது மிகையாகாது.

பண்டிதர் அவர்களுக்கு இம்மருந்துகளால் செல்வமும் புகழும் குவிந்தன.

> ''வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
> உள்ளத் தனைய துயர்வு'' என்னும் செந்நாப் போதாரின்

சிறப்பு மொழிக்கிணங்க, பண்டிதர் அவர்களின் உள்ளத்தைப் போலவே அவர்தம் நிலையும் மேலும் மேலும் உயர்ந்தது.



# 4

# கண்கவர் தோட்டம்

''காவிரியின் பாய்ச்சலெலலாம் கருப்பஞ்சோலை
கழனியெலாம் கதிர்முத்தும் செந்நெற்சாலை''

என்று ''தமிழ்க்குமரி''யைப் பாடினார் ச. து. சுப்பிரமணிய யோகியார்.

காவிரி பாயும் தஞ்சையில் குடியேறிய **ஆபிரகாம் பண்டிதர்,** வண்ண மலர்ச் செடிகளும் கனி தரும் மரங்களும் நிறைந்த ஓர் அழகிய தோட்டத்தைத் தம் மனக் கண்களால் கண்டார் போலும். அதனைச் செயலாற்றும் வகையில் அவர் தஞ்சை நகருக்கு 2 மைல் தொலைவிலுள்ள ஏறத்தாழ 100 ஏக்கர் பரப்பு கொண்ட ஓர் இடத்தை 1899-ம் ஆண்டு வாங்கினார். அந்த இடம் அடர்ந்த காடு போல் காணப்பட்டது. பாம்புகள் மிகுந்திருந்தன. எனினும், தமது கற்பனையில் கண்ட அழகிய சோலையாக அதனை மாற்ற வல்ல மனத்திண்மை அவருக்கிருந்தது. விடாமுயற்சியுடனும் தன்னம்பிக்கையுடனும் இப்பணியில் அவர் இறங்கினார்.

**கவின்மிகு காற்றுடிக் கிணறு**

மாபெரும் தோட்டமொன்று அமைக்க எண்ணிவிட்டால் முதலில் அதற்குத் தண்ணீர் வேண்டாமா? எனவே புதர்களையெல்லாம் அழித்துச் செப்பனிட்ட பின்னர், ஆங்காங்கே கிணறுகள் வெட்ட அவர் ஏற்பாடு செய்தார். 1904ம் ஆண்டு, முதல் கிணறு வெட்டப்பட்டது. அது 22 அடி சதுரமும் 40 அடி ஆழமும் கொண்டதாக இருந்தது. தண்ணீர் இறைக்க 9½ குதிரை சக்திகொண்ட கிராஸ்லி எண்ணெய் இன்ஜின் ஒன்று 4'' குழாயுடன் பொருத்தப்பட்டது. இறையருளால் தண்ணீர் ஏராளமாய்ப் பொங்கிப் பெருகிற்று. வறண்ட பூமியும் பண்டிதரின் உள்ளமும் ஒருங்கே குளிர்ந்தன. அக்காலத்திலேயே

அறிவியல் துறையின் சாதனங்களைப் பயன்படுத்தும் ஆர்வமும் முற்போக்குக் கருத்தும் உடையவராய் அவர் விளங்கினார். அடுத்த ஆண்டில் பாண்டிச்சேரியிலிருந்து பூமியில் துளைபோடும் கருவி (boring apparatus) வரவழைக்கப்பட்டு, கிணற்றில் சுமார் 100 அடி ஆழம் வரையில் பல இடங்களில் துளை போடப்பட்டது. இதன் பயனாய்த் தண்ணீர் பெருமளவில் கிடைத்து தோட்டம் வளப்படுத்தப்பட்டது. 8 அடி சதுரமும் 75 அடி ஆழமும் கொண்ட மற்றொரு கிணறும் அதே ஆண்டில் தோண்டப்பட்டது. காற்றாடியும், தண்ணீர் இறைக்கும் குழாயும் இணைந்த ஒரு காற்றாடி இயந்திரம், லிவர்பூலிலிருந்து தருவிக்கப்பட்டு, இக் கிணற்றில் பொருத்தப்பட்டது. இந்தப் பெரிய காற்றாடி கம்பீரமாகவும் மிகப் பொலிவுடனும் விளங்கியது. இயற்கைச் சக்தியான காற்றினால் இயங்கி, இந்த இயந்திரம் தண்ணீர் இறைக்-கும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக விளங்கியது. பாலைவனம் சோலைவனமாக மாற மாறப் பண்டிதர் எல்லையிலா மகிழ்ச்சியுற்றார். நாளடைவில் காண்போர் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் ஒரு வனப்புமிக்க தோட்டம் அங்கே உருவாயிற்று. தம் குருநாதரின் அன்பு நினைவாக இத்தோட்டத்திற்குக் **"கருணாநந்தபுரம்"** என்று பெயரிட்டு மகிழ்ந்தார் ஆபிரகாம் பண்டிதர்.

### கருணாநந்தபுரம்

இத்தோட்டம், தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து விவசாயிகளும், மாணவர்களும், சுற்றுலாப் பயணிகளும் வந்து கண்டு களிக்கத்தக்க சிறப்பு வாய்ந்ததாக அமைந்திருந்தது.

> ''கொந்தளவு மாங்கனியும் தீம்பலாவும்
> குளிர்நறவத் தொடுகுழைந்து மதுக்குலாவும்''

என்று யோகியார் கண்ட காட்சி அங்கே நனவாக விளங்கியது. பலவிதமான ஒட்டு மாங்கன்றுகளும், பலாமரங்களும் ஒருபுறம் அமைந்திருந்தன. மற்றொருபுறம் தென்னையும் ஈச்சையும் ஓங்கி வளர்ந்து அழகுக்கு அழகு செய்தன. பட்டிலுப்பை, திராட்சை, அத்தி, பேரீச்சை, கொய்யா, மாதுளை, மங்குஸ்தான், ஆரஞ்சு, ஆப்பிள்மரங்கள் பிறிதொருபுறம் செழித்தோங்கிச் சிந்தையைக் கவர்ந்தன. தேக்கும் பாக்கும் சந்தனமும் சண்பகமும் முந்திரியும் மூங்கிலும் கண்டோர் வியக்கும் வண்ணம் கவினுறக் காட்சியளித்தன. அரரூட், மரவள்ளி, சர்க்கரைவள்ளி, முள்ளங்கி போன்ற கிழங்கு வகைகளையும், ஆங்கிலக் காய்கறிவகைகளையும் பண்டிதர் அங்கே பயிரிட்டார். இவை தவிர ரோஜா, மல்லிகை, முல்லை, சம்பங்கி,

லீலி மலர்களும் அங்கே மலர்ந்து மணம் வீசின. பண்டிதர் அவர்களின் சாதனையைப் 'பசுமைப் புரட்சி' என்று கூறலாம் அன்றோ? மருந்துகள் செய்வதற்கு வேண்டிய பலவிதமான மூலிகைகளையும் பண்டிதர் அங்கே பயிரிட்டார். அவர்தம் ஆற்றலை எண்ணுந்தோறும் உள்ளம் வியப்பால் நிறைகிறது.

## புதுவகைக் கரும்பு

விதம் விதமான செடி கொடிகளையும் மரங்களையும் வளர்த்து ஒரு பெரிய தோட்டத்தை உண்டாக்கிய ஆபிரகாம் பண்டிதர், அவ்வளவில் மனநிறைவு பெற்றாரில்லை. விவசாயத் துறையில் மேலும் மேலும் பல ஆராய்ச்சிகளைச் செய்து பயனடைந்தார். பல்வேறு இனத்தைச் சேர்ந்த கரும்பு வகைகளைப் பயிரிட்டார். சாமல் கோட்டை, பாலூர் போன்ற பல இடங்களிலுள்ள அரசாங்க விவசாயப் பண்ணைகளிலிருந்து பலவிதமான கரும்பு வகைகளைத் தருவித்து, பரீட்சார்த்தமாகப் பயிரிட்ட போது ஒரு புதுவகைக் கரும்பை அவர் கண்டுபிடித்தார். இந்தக் கரும்பு சுமார் 12 அடி முதல் 15 அடி வரை உயரமுள்ளதாகவும், மிகவும் பருமனாகவும் இருந்தமையால் இது 'ராஜாக் கரும்பு' என்று பெயர் பெற்றது. சாம்பல் நிறமும் பல கோடுகளும் கொண்டு பொலிவுடன் விளங்கியது. அரசுத் தாவர இயல் நிபுணர் Mr. C. A. Barber, M. A F. L. S இப்பண்ணைக்கு 1906ம் ஆண்டு வந்திருந்த போது, இந்தப் புது ரகக் கரும்பைக் கண்ணுற்று வெகுவாகப் பாராட்டினார். அரசு விவசாயப் பண்ணைகளிலும் இக் கரும்பைப் பயிரிட ஏற்பாடு செய்தார். வேளாண்மைத் துறைத் துணை இயக்குநர் Mr. A. C. Sampsen பாலூர் விவசாயப் பண்ணையின் 1909-1910ம் ஆண்டிற்கான அறிக்கையில், 'ஆபிரகாம் பண்டிதரின் தோட்டத்தில் பயிரிடப்பட்டுள்ள ராஜா கரும்பில் சர்க்கரைச் சத்து அதிக அளவில் இருக்கிறது என்றும், இதினின்று தயாரிக்கப்படும் வெல்லம் நல்ல வெள்ளை நிறமாக இருக்கிறது' என்றும் குறிப்பிட்டுள்ளார். அக்காலத்தில் தென்னிந்தியாவில் நடைபெற்ற விவசாயப் பொருட்காட்சிகளில், கருணாநந்த புரத்தில் பயிரிடப் பெற்ற கரும்பு, ஒவ்வொரு முறையும் முதற் பரிசைப் பெற்றது.

ஆஸ்திரேலிய செந்நிறச் சோளமும் இமாலய சோளத் தினுசுகளும் பண்டிதரால் பயிரிடப்பட்டன. பல கலப்பினச் சோளப் பயிர்களும் இங்குப் பரீட்சார்த்தமாகப் பயிரிடப்பட்டு ஆராயப்பட்டன.

தாம் புதிதாகக் கண்டு பிடித்த பயிர்களைப் பற்றியும், அவைகளைப் பயிரிடும் விதம் பற்றியும், ஆங்கிலத்திலும் தமிழிலும் பல பிரசுரங்களை

அச்சிட்டு, அவைகளை இலவசமாகப் பல விவசாயிகளுக்குப் பண்டிதர் விநியோகித்தார். விவசாயத் துறையில் தாம் கண்ட முன்னேற்றத்தை மற்ற விவசாயிகளும் அறிந்து பயனடைய வேண்டும் என்ற சிறந்த நோக்கோடு அவர் இவ்வாறு பணியாற்றினார்.

பண்டிதர் தமது தோட்டத்தில் பணியாற்றுவதற்கென பல பண்ணையாட்களை நியமித்து, அவர்கள் வசதியுடன் வசிப்பதற்கு ஏற்ற குடியிருப்பு மனைகளைக் கட்டித் தந்தமையால் ‘கருணாநந்தபுரம்’ ஒரு சிறு கிராமம் போலக் காட்சியளித்தது எனலாம். இங்கு ஓர் ஆட்டுப் பண்ணையையும் ஒரு மாட்டுப் பண்ணையையும் ஏற்படுத்திச் செவ்வனே நடத்தி வந்தார். அத்துடன் பட்டுப் பூச்சிகளைப் பரீட்சார்த்தமாக வளர்த்துப் பட்டு நூல் உற்பத்தியும் செய்து வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

### பரிசுகளும் பாராட்டுகளும்

1907ம் ஆண்டு முதல் 1914ம் ஆண்டுக்குட்பட்ட ஏழு வருடங்களில் கருணாநந்த புரம் விவசாயப் பண்ணை, பல்வேறு விவசாயப் பொருட் காட்சிகளில் பங்கு பெற்று 6 தங்கப் பதக்கங்களையும் 37 வெள்ளிப் பதக்கங்களையும், 7 பித்தளைப் பதக்கங்களையும், மற்றும் பல முதற் பரிசுகளையும், நற்சான்றுப் பத்திரங்களையும் பெற்றது. இங்குள்ள கால் நடைப்பண்ணையும் முதற் பரிசு பெற்றது.

பல பெரியோர்கள் பண்டிதரின் தோட்டத்தைப் பார்வையிட்டு விவசாயத் துறையில் அவர் புரிந்த சாதனைகளைப் பாராட்டினர். சென்னை ஆளுநராகப் பணியாற்றிய **சர் ஆர்தர் லாலி**, பாண்டிச்சேரி ஆளுநர், விவசாய கமிஷனர் திரு. **சிவசாமி ஐயர் CIE, C.S.I,** இராமநாதபுரம் **இராஜா**, திருவனந்தபுரம் **இளவரசர் நாராயணன் தம்பி**, கேரள விவசாய டைரக்டர் **என். குஞ்சன் பிள்ளை**, கோவை விவசாயக் கல்லூரி முதல்வர் திரு **ஆர். சசில் உட்** முதலியோர் இத் தோட்டத்தைப் பார்வையிட்டு மகிழ்ந்து பாராட்டினார்கள்.

சென்னை ஆளுநர் **சர் ஆர்தர் லாலி** 1908ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 22ந் தேதி பண்டிதரின் தோட்டத்திற்கு விஜயம் செய்தபொழுது, பார்வையாளர் புத்தகத்தில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். “ **ஆபிரகாம் பண்டிதரின்** அழைப்பிற்கிணங்க இன்று அவருடைய தோட்டத்தைக் கண்டு களிப்புற்றேன். அவர் விவசாயத் துறையில் செய்து வரும் பரீட்சார்த்த முறைகளைக் கண்ணுற்றேன்.

வேளாண்மைத் துறையில் முன்னேக்குடனும், விடா முயற்சியுடனும், திறமையுடனும் பணியாற்றுவதற்கு அவரை ஓர் உதாரணமாகக் கொள்ளலாம்.''

எல்லாவற்றிற்கும் மேலாக, வேளாண்மைத் துறையிலும் சித்த மருத்துவத் துறையிலும் **ஆபிரகாம் பண்டிதர்** ஆற்றிய அரும் பணிகளைப் பாராட்டி அரசு அவருக்கு **"ராவ் சாஹேப்"** என்ற பட்டத்தை 1909ம் ஆண்டு வழங்கிச் சிறப்பித்தது.



5

# இனிய இசைத் தமிழ்

''இசை உருவானது செந்தமிழே — முதல்
ஏழிசை கண்டதும் செந்தமிழே''

— பாவலர் பாலசுந்தரம்.

இயற்றமிழைக் கேட்டும் வாசித்தும் கூட அதன் பொருளை உணர முடியாத ஒருவன் இசைத் தமிழைக் கேட்கும்போது அதன் பொருட் சுவையை முற்றிலும் உணர்வது நிச்சயம். இனிய தமிழ் மொழி, இசையோடு கலக்குமானால் கேட்போர் உள்ளம் பரவசமடையும் என்பதில் ஐயமில்லை. தமிழிசை இனியது என்பதையுணர்ந்து அதன் வளர்ச்சிக்குத் தம்மை முற்றிலும் அர்ப்பணித்தவர் **ஆபிரகாம் பண்டிதர்** என்று கூறலாம்.

கர்நாடக சங்கீதம் சிறப்புற்றோங்கிய சோழ நாட்டிலுள்ள திருவாரூரில் அவதரித்த திரு. தியாகய்யரவர்கள் இறைவனைப்பற்றித் தினந்தோறும் புதிது புதிதான சாகித்யங்கள் செய்து, சகல சங்கீத லட்சணங்களோடும், ராக பாவத்தோடும், அர்த்த புஷ்டியோடும் கூடிய ஆயிரக் கணக்கான உருப்படிகளை அவர்கள் தாய்மொழியாகிய தெலுங்கிலே வெகு அழகாக யாவரும் கொண்டாடக் கூடிய விதத்தில் இயற்றியிருக்கிறார்கள். அங்ஙனமே தீக்ஷிதர், சியாமா சாஸ்திரிகள் முதலானோர் செய்த கீர்த்தனங்களும் வர்ணங்களும் தெலுங்கு, சமஸ் கிருதம் ஆகிய மொழிகளில் அமைந்திருக்கின்றன.

திரு. புரந்தரதாசர் 15ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 16ம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் (1494 - 1564) வாழ்ந்தவர். இவர் ஸ்வராவளி, அலங்காரங்கள், கீதங்கள் முதலியவற்றைக் கன்னடத்தி லும் சமஸ்கிருதத்திலும் இயற்றினார். மாயாமாளவகௌளை ராகத்தில்

சங்கீத வித்தையை ஆரம்பிப்பது என்ற சம்பிரதாயத்தை ஏற்படுத்தியது அவர்தான். பெரியோர்கள் இசையில் வல்ல இவருக்குக் 'கர்நாடக சங்கீத பிதாமஹர்' என்னும் பட்டத்தைச் சூட்டினார்கள். திரு. புரந்தர தாசர், குழந்தைகள் எளிதாகக் கற்கும் பொருட்டு பிலஹரி ராகத்தில் பிள்ளையார் கீதம், மகேஸ்வர கீதம், விஷ்ணு கீதம் போன்றவைகளைக் கன்னடத்தில் எழுதி வைத்துள்ளார்.

இங்ஙனம் தெலுங்கு, சமஸ்கிருதம், கன்னடம் ஆகிய மொழி களில் அமைந்துள்ள கீர்த்தனங்களையும் பாடல்களையும் பொருள் தெரியாமல் பாடுவதினால், சங்கீதத்தில் அர்த்த பாவம் என்ற மேலான பாவத்தை விருத்தி செய்ய முடியாமல் இருப்பதைப் பண்டிதர் உணர்ந் தார். பொருளின்றி இனிய ஓசையை மட்டும் அந்நிய மொழிகளில் கேட்டு இன்புறுவதை விட, இசையின் இனிய ஓசையோடு பொருளு மறிந்து பக்தி ரசமான கீர்த்தனைகள் பாடப்படுமானால் கேட்பவர்கள் யாவரும் நற்பயனடைவார்கள் என்பதைப் பண்டிதர் உணர்ந்தார். எனவே தமிழில் பல பாடல்களை எழுதி அவற்றிற்கு இசையமைக்கும் பணியில் ஈடுபட எண்ணினார்.

இப்பணிக்கு ஆரம்பமாக அவர் 96 தமிழ்ப் பாடல்களை இயற்றினார். இவைகளில் கீதம், சுரஜதி, க்ருதி, ஜதிஸ்வரம், வர்ணம் முதலியவை அடங்கும். இதில் முதல் 41 உருப்படிகள், தஞ்சாவூர் சங்கீத வித்வான் ஸ்ரீ ஜெகன்னாதை பட்டுகோசாமி அவர்களால் சொல்லிக் கொடுக்கப் பட்டும் பிழை பார்க்கப்பட்டும் உள்ளன. பின்னுள்ள 55 உருப்படிகள் தஞ்சாவூர் அரண்மனை சங்கீத வித்வான் வைணிகர் ஸ்ரீ வெங்கடாசல ஐயரவர்களால் வீணையில் சொல்லிக் கொடுக்கப்பட்டும், சுரப் படுத்தி பிழை பார்க்கப்பட்டும் உள்ளன. இந்த 96 உருப்படிகளில் சுமார் 50 உருப்படிகள் தஞ்சாவூர் சங்கீத வித்துவான் சாமியாப் பிள்ளை அவர் களால் வாய்ப்பாட்டாகச் சொல்லிக் கொடுக்கப்பட்டுள்ளன. பண்டிதர் அவர்கள் இதைத் தவிர, சாகித்யமில்லாத சுரஜதிகளுக்கும், வர்ணங் களின் எத்துக்கடை சுரங்களுக்கும், பிற மொழிகளிலுள்ள சாகித்யங் களுக்கும் தமிழில் எளிதான நடையில் பாடல்கள் இயற்றியுள்ளார். இப்பாடல்கள் அடங்கிய நூல் "கருணாமிர்த சாகரத் திரட்டு" என்ற பெயரில் 1907ம் ஆண்டு அதாவது இன்றைக்கு 76 ஆண்டுகளுக்கு

முன்பு வெளியாகியுள்ளது. இந்நூல் ஹோ அண்டு கம்பெனியாரின் ''பிரிமியர்'' என்ற அச்சுக் கூடத்தில் அக்காலத்தில் பதிப்பிக்கப் பட்டது.

ஆபிரகாம் பண்டிதர் தம் இல்லத்திலுள்ள பிள்ளைகள் இசையில் முறையாகப் பயிற்சி பெறவேண்டும் என்றும், அவர்கள் சொற் பிழை, சுரப்பிழை, தாளப்பிழை முதலியவை இல்லாமல் தமிழ்ப்பாடல்களைப் படிக்கவேண்டும் என்றும் விரும்பினார். அவர்களுக்குத் தஞ்சை அரண்மனை வித்வான் வீணை வெங்கடாசலம் ஐயர் மூலம் வீணையும், திரு. தியாகராஜ பிள்ளையின் குமாரர் சாமியா பிள்ளை மூலம் வாய்ப் பாட்டும், கிருஷ்ணபாகவதரின் சிஷ்யரான பஞ்சாபகேச பாகவதர் மூலம் பிடிலும் கற்பிக்க ஏற்பாடு செய்தார். குழந்தைகள் தாங்கள் பாடும் பாடல்களைக் கிளிப்பிள்ளைகள் போல் படிக்காமல் பொருளை உணர்ந்து அர்த்த பாவத்துடன் பாடவேண்டும் என்பதற்காக அக் காலத்தில் பாடப்படும் விஷ்ணு தோத்திரம், மற்றும் ஸ்ரீராகம் சுத்த சாவேரி, நாட்டை ராக கீதங்களுக்குத் தமிழ்ப் பாடல்கள் எழுதினார். அவற்றில் 'பதும நாபா பரம புருஷா' என்ற கன்னட கீதத்திற்கு அவர் எழுதிய தமிழ்ப் பாடலை இங்கு உதாரணமாகக் காண்போம்.

'உன்னத வாசா உச்சித நேசா
சதா தரும் அருள் சத்ய ரூபா
பரம பதம் தர உலக நலம் பெற
அடியார் கேட்டிடும் அருளும் நாதா
விமலஞ்கிய வேதனுனதடி
வாழ்த்தித் துதித்திட வாரும் வரந்தர''

இது போன்று மற்றும் பல சுரஜதிகளுக்கும் வர்ணங்களுக்கும் ஆபிரகாம் பண்டிதர் தமிழ் சாகித்யம் எழுதியுள்ளார்.

ஒரு பாடலில் சுரமும் சாகித்யமும் எழுத்திலும் உச்சரிப்பிலும் ஒன்றுபோல் அழகுற அமைந்திருந்தால் அதை ஸ்வராட்சரம் என்று அழைக்கிறோம்.

கமாஸ் ஸ்வரஜதியில் பல்லவியிலும் இரண்டாவது சரணத்திலும் இவ்வாறு சுவராட்சரம் அழகுற அமைந்துள்ளது.

ராகம்: கமாஸ் தாளம்: ஆதி

| 4 | 0 | 0 |
|---|---|---|
| | பல்லவி | |
| ச்ாச்ாச்ா நிதநீ பமகா மப | மா மாமா சம | கமா பா தா நி |
| காவாவா பரனே கருணுகர | னே தேவா கதி | தரு பா தா நீ |
| | சரணம் 2 | |
| தா;; தநிதபமக மப தநி | தா;; தக் | ரிச்ாரி ச்நிதநி |
| தா திருமரிமகவெனு மனி | தா தக | மை பாடிடவரமு |
| தா;;கமபதா நிக்ரிச்நி | தா;; ச்நி | தா, ரிச்நிதநி |
| தா சுகமுந்தா அனுதினமுந் | தா அனந் | தா உலகிதினில் |

காம்போதி பைரவி கல்யாணி ராகங்களில் அமைந்த அடதாள வர்ணங்களுக்குத் திரு பண்டிதர் தமிழ் சாகித்யங்கள் இயற்றியுள்ளார். ஸ்ரீ வடிவேலு இயற்றிய ''ஸரஸிஜப நாபா நின்னு'' என்று துவங்கும் காம்போதி ராக அடதாள வர்ணம் மூன்ருவது சரணத்தில், ஸ்வராட்சரம் இவ்வாறு அமைந்திருப்பதைக் காணலாம்.

| 5 | 5 | 0 | 0 |
|---|---|---|---|
| மா;;பதமா பதநித- மா பஸ்நித | மா தமா பகமபா;, நிதபமகரிக | ஸா, ரிசநிபா | தஸாரிகமரிக |
| மா புவி மானிடர் தருமாதுயர்பட | மானமாறதிறமா எனதினிய பெரு | மா மகிழவா | ருமா பரம பெரும் |

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவராக விளங்கிய திரு. தியாகராசர் இயற்றிய சில தெலுங்குக் கிருதிகளின் மெட்டில் ஆபிரகாம் பண்டிதர் தமிழ்ப் பாடல்கள் இயற்றியுள்ளார். எந்தவெடுகோ — சரஸ்வதி மனோகரி — (சிந்தை தேற நீ); நன்னு கன்னதல்லி — சிந்து கன்னடா — (மண்ணுல்கமிதில்); மருகேலரா — ஜெயந்தஸ்ரீ — (வரந்தரவே வாவா தேவா); நின்னுவினா — நவரசக் கன்னடா — (என்றுமுனை நான் மறவேன்) — இவை போன்ற தமிழ்க் கீர்த்தனைகள் அவர் எழுதியுள்ளவையாகும்.

உதாரணமாக இவ்வாறு எழுதப்பட்ட கீர்த்தனைகளில் ஒன்றைப் பார்ப்போம்.

ராகம்: ஜெயந்த ஸ்ரீ தாளம்: ஆதி

பல்லவி

வரந்தரவே வா வா தேவா

அனுபல்லவி

நிரந்தரமாக நின்னை நான் புகழ
மறந் திடா துனை வாழ்த்தியே மகிழ

சரணம்

அன்னை தந்தையருள் அன்பனும் நீ குரு
மன்னனும் நீ பெருவாழ்வுந் தேவ தரு
உன்னையன்றி வேறு உற்ற துணை யாரு
என்னையே கண்பாரும் என்றும் துதி கூறிட

இவை தவிர சில பரம்பரைப் பாடல்களின் மெட்டுகளிலும் ஆபிரகாம் பண்டிதர் பாடல்கள் இயற்றியுள்ளார். திருமணக் காலத்தில் லாலிப்பாடல், நலுங்குப் பாடல் முதலியவை பரம்பரையாகப் பாடப்படுகின்றன.

மணமகனையும் மணமகளையும் ஊஞ்சலில் இருத்தி, பெண்கள் எல்லோரும் சேர்ந்து ஊஞ்சலை ஆட்டி உற்சாகமாகப் பாடுவது லாலிப் பாடல். தமிழகத்தில், இன்றும் இப்பழக்கம் இருந்து வருகிறது. நலுங்குப் பாடலும், லாலிப் பாடலும் இன்றும் பாடப்பட்டு வருகின்றன. லாலிப் பாடல் பெரும்பாலும் நவரோஜ் ராகத்தில் அமைந்திருக்கும். பெண்கள் பாடும்போது நாதஸ்வர வித்துவானும் சேர்ந்து இப்பாடலை வாசிப்பார்.

இறைவனை மனமெனும் ஊஞ்சலில் இருத்தி, அவரது அரிய பண்புகளையெல்லாம் மனதில் உன்னி, லாலிப் பாடல் பாடி அகமகிழ் வெய்துகிறார் ஆபிரகாம் பண்டிதர்.

ராகம்: நவரோஜ் தாளம்: ரூபக தாளம்

வானம் புவியாவும் செய்த வல்லவா தேவா
ஏழை யுருவாக வந்த
இன்பமே வாவா — லாலிலா லையா லாலீ

ஆதாரம் ஆறில் நின்று ஆடிவரும் அருளே
ஆதாரம் உனையன்றி ஆருண்மைப் பொருளே
லாலிலா லையா லாலீ

வேல்வாயில் மாண்டுயிர்த்த மெய்கொண்ட பாலா
ஆலமுண்டு அமுதளித்த ஆபிரகாம் தேவா
லாலிலா லையா லாலீ

முப்பாழுக்கப்பால் நின்று முற்றுமொழியானவா
தப்பாதுனதடியார் தானிலங்க வாவா
லாலிலா லையா லாலீ.

பண்டிதர் தமது வாழ்வின் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தம்முடைய அனுபவங்களையெல்லாம் தமிழ்ப் பாடல்களாக இயற்றி, இறைவனைத் துதித்துப் பாடினார். மருத்துவத் துறையில் அடியெடுத்து வைத்த ஆரம்ப காலத்தில், வறுமையில் வாடிய போது ''காக்கும் வழி உனக்கில்லையா'' என்று இறைவனை நோக்கி அவர் மன்றாடினார்.

ராகம்: மாஞ்சி தாளம்: ஆதி

பல்லவி

காக்கும் வழி உனக்கில்லையா — மகிழ்
வாக்குவதும் பெரும் தொல்லையா — எனை

அனுபல்லவி

ஆக்கி அணைத்து அழித்து அனைத்தையும்
நோக்கும் கருணாகரக் கடலே

சரணம்

கண்டாலுனை விடுவேனோ — மனமலர்
செண்டால் பாதம் துதியேனோ — பெரும்

சண்டாளன் என்றெனைத் தள்ளாது கொள்வையேல்
கண்டோர் கேட்டோர் களிக்கப் புகழ் சொல்வேன்.

இறைவன் அவருக்கு ஞானம், செல்வம் முதலியவற்றைக் கொடுத்து ஆசீர்வதித்த பொழுது ''இல்லான் என்றனுக்கு என்றும் நிறைவாய் — எல்லாம் தந்த உன்னை என்றும் துதிப்பேன்'' என்று போற்றிப் பாடினார்.

ராகம்: சங்கராபரணம் தாளம்: ஆதி

பல்லவி

இல்லான் எந்றனுக்கு என்றும் நிறைவாய்
எல்லாம் தந்த உன்னை என்றும் துதிப்பேன்.

அனுபல்லவி

உன்னை என்றும் துதிப்பேன் எனை ஏற்றுக்கொள்ளுவாய் — வினை
மாற்றிய உந்தன் செயல் போற்றிப் புகழ்வேன்.

சரணங்கள்

1

பரதேசி போலலைந்தேன் பாதம் பட்ட இடமெல்லாம்
அரசாள அன்பு வைத்து அனந்த காலம் இருத்தி நிலை.

2

கோலும் கையுமாக வந்த கோலமெல்லாம் நீ தவிர்த்து
பாலும் தேனும் ஓடும் கானன் பாக்கியத்தைத் தந்து பொருள்

3

ஆபிரகாம் உன்னைத் தேட ஆனந்த நற் கீதம் பாட
பாவத்துயர் யாவும் ஓட பங்குபோட பரம பாத்திய

இறைவனைத் தாயாகவும், தந்தையாகவும், சற்குருவாகவும், ஞானமணவாளனாகவும் பாவித்து, இறைவன் மீது காதலாகிக் கசிந்துருகிக் கண்ணீர் சிந்தி அவர் பாடிய பாடல்கள் நம் உள்ளத்தை உருக்கும் வகையில் அமைந்துள்ளன.

பேஹாக் ராகத்தில் பண்டிதர் இயற்றிய திருமணப் பாடல் அநேகமாக எல்லா கிறிஸ்தவ திருமண ஆராதனைகளிலும் இன்றும் பாடப்பட்டு வருகிறது. பாடலின் மெட்டும் சாகித்யமும் யாவரையும் கவரும் வண்ணம் அமைந்துள்ளன.

ராகம்: பேஹாக் திஸ்ரஏகம்.

பல்லவி

மங்களம் செழிக்கக் கிருபையருளும் மங்களநாதனே.

சரணங்கள்

1

மங்கள நித்திய மங்கள நீ
மங்கள முத்தியும் மங்கள நாதனும் நீ
எங்கள் துங்கவன் நீ எங்கள் புங்கவன் நீ
உத்தம சத்திய நித்திய தத்துவ
மெத்த மகத்துவ அத்தனுக்கத்தனும் ஆபிராம் தேவன் நீ

2

மங்களம் மணமகன்..........................க்கும்
மங்களம் மணமகள்..........................க்கும்
மானுவேலர்க்கும் மகானுபாவர்க்கும்
பக்தியுடன் புத்தி முத்தி யளித்திடும்
நித்தியனே உன்னே துத்தியம் செய்திடும் சத்திய வேதர்க்கும்

உலக மக்களுக்கு இறைவனின் பேரன்பைத் தெரியப் படுத்தவும், அவர்களின் பாவங்களுக்குப் பரிகாரமாக தமது திருரத்தத்தைச் சிந்தி அவர்களை மீட்டுக் கொள்ளவும், இறைவனின் திருமகனும் கிறிஸ்து பெருமான் பாலஸ்தீன நாட்டில் கன்னி மரியாள் என்னும் கன்னிப் பெண்ணின் திருவயிற்றில் கருவாகி உருவாகி பெத்லகேம் என்னும் சிற்றூரில் அவதரித்தார். கீழ் நாட்டிலுள்ள ஞானிகள் இந்தத் தெய்வக் குழந்தையைப் பணிந்து கொண்டு, பொன், வெள்ளைப்போளம், தூபவர்க்கம் முதலிய பொருட்களைக் காணிக்கையாகப் படைத்தனர்.

அந்தக் காலத்துப் பழக்கப்படி, குழந்தையை ஆண்டவருக்கென்று ஒப்புக் கொடுக்க கன்னி மரியன்னையும் யோசேப்பும் எருசலேமிலுள்ள தேவாலயத்திற்கு வந்தார்கள். அங்கே சிமியோன் என்ற வயது முதிர்ந்த பக்தன் இருந்தார். அவர் தெய்வ பக்தியும் நீதியும் உள்ளவராய் இருந்தார். யோசேப்பும் மரியாளும் குழந்தையைத் தூக்கிக் கொண்டு வருவதைத் தூரத்திலேயே கண்டு, சிமியோன் எதிர் கொண்டுபோய், குழந்தையைத் தம் கைகளில் ஏந்திக்கொண்டு ஆண்டவரைத் துதித்தார். ''கண்டேன், கண்டேன், என் கர்த்தனே இன்று கண்குளிரக் கண்டேன்'' என்று சிமியோன் ஆனந்தப் பரவச மடைந்தார். விண்ணோர்கள் கொண்டாடும் கோமானே இன்று என்

கையிலேந்திக் கண்டேன். மண்ணோர் இருள் போக்கும் மாமணியைக் கண்டேன், விண்ணோரும் வேண்டி நிற்கும் விண்மணியைக் கண்டேன் என்று ஆனந்த சாகரத்தில் மூழ்கினார்,

சிமியோன் ஆனந்த பரவசமடைந்த இந்தக் காட்சியை ஆபிரகாம் பண்டிதர் ஒரு பாடலில் இவ்வாறு அழகாக வர்ணித்துள்ளார்.

ராகம்: பேஹாக் தாளம்: ஆதி

பல்லவி

கண்டேன் என் கண்குளிர — கர்த்தனை இன்று

அனுபல்லவி

கொண்டாடும் விண்ணோர்கள் கோமானைக் கையிலேந்திக்

சரணங்கள்

1

அண்டாண்ட புவனங்கள் கொண்டாட மாய்
சண்டாளன் சிறைமீட்கும் சத்தியனை நித்தியனை

6

முத்தொழிற் கர்த்தாவாம் முன்னவனை
இத்தரை மீட்க எனை நத்திவந்த மன்னவனை.

7

மண்ணோரிருள் போக்கும் மாமணியை
விண்ணோரும் வேண்டி நிற்கும் விண்மணியைக் கண்மணியை

9

தேனை திகட்டாத தெள்ளமுதை
கோனை என் குருவை குலந்தழைக்கும் ஆரமுதை

10

அண்டினோர்க்கன்புருவாம் ஆரணனை
கண்டோர்கள் கலி தீர்க்கும் காரணனைப் பூரணனை.

காம்போதி ராகத்தில் அவர் இயற்றிய ''உன்னையே நம்பினேன்'' என்னும் கீர்த்தனம் அவரது கடவுள் பக்தியையும், கிறிஸ்தவ வேத அறிவையும் எடுத்துக் காட்டுகிறது. இந்தக் கீர்த்தனையின் அனுபல்லவியில் ''உயிரே தருவான் சுடராய் வருவாய் — கருணாகரனே — கரங்குவித்தேன் — ஊழ்வினை தீர்த்து எனக்குயிர் தந்த பரமனே'' என்று

பாடுகிறார். ''ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலம் மலிகின்ற உலகோர் வாதையால் நொந்து வந்தேன். நாதன் உனின் பாதம் கெதி'' என்று முதலாம் சரணத்தில் ஆண்டவரிடம் வேண்டுகிறார்.

பட்டியில் பத்திரமாக இருக்கும் 99 ஆடுகளைப் பற்றிக் கவலைப் படாமல், காணமல் போன ஓர் ஆட்டைத் தேடிக் கண்டு பிடிக்கும் மேய்ப்பன் போல, இறைவன் தவருன வழியில் செல்லும் பாவியைத் தேடிக் கண்டு பிடித்து அவனை மீட்டுக் கொள்கிறார். இந்தக் கருத்து இரண்டாவது சரணத்தில் அழகுற அமைந்துள்ளது.

இறைவனின் ஒப்பற்ற நற்குணங்கள் எல்லாம் ஆருவது சரணத்தில் விளக்கப்பட்டுள்ளன. இனி, பாடலைப் பார்ப்போம்.

ராகம்: காம்போதி தாளம்: ஆதி

பல்லவி

உன்னையே நம்பினேன் நான் தானே
என்னைக் காவா – திருந்திட நலமோ

அனுபல்லவி

உலகிடரால் உனதடியேன் படுதுயரே கெடநினைவாய்
உயிரே தருவான் சுடராய் வருவாய் கருணைகரனே கரங்குவித்தேன்
ஊழ்வினை தீர்த்துயெனக் குயிர்தந்த பரமனே.

சரணங்கள்

1

மலமா மாணவம் கன்மம் மாயை மலிகின்ற
உலகோர் வாதையால் நொந்து வந்தேன் ஆவலாய்
பலகாலமுமுன்னைத் துணை செய்ய வேண்டினேன்
நலந்தர இது ததி நாதனுனின் பாதம் கெதி

2

வழியோ காணமல் வந்தேன் வந்தேன் புதர் முள்ளில்
விழியோ பிதுங்கிட விழுந்தேன் அழுந்த பாசம் சுற்றி
அழிவாமெனைத்தேடி அலைந்துடன் கண்டு தோளில்
களிப்பாய் சுமந்து மீட்டிடக் கருணைகொள் மேய்ப்பனுக.

6

சத்து சித்தானந்தமாய் சர்வ பரி பூரணமாய்
சுத்த பரிசுத்தனுமாய் தோன்றுமாதி காரணமாய்
சித்தம் களிக்க அன்பர் சிந்தை குடிகொண்ட தேவா
நத்தி வரும் மைந்தனுக்கு முத்தி தரும் தந்தையாக

இங்ஙனம் இசைத் தமிழின் இனிமையைப் பூரணமாய் உணர்ந்து அனுபவித்தவர் ஆபிரகாம் பண்டிதர் என்று அறுதியிட்டுக் கூறலாம்.





1916–ம் ஆண்டு ஆகஸ்ட் 19, 20 தேதிகளில் ஆபிரகாம் பண்டிதர் தஞ்சையில் நடத்திய ஏழாவது இசை மாநாட்டில் கலந்து கொண்டவர்கள்.

# 6

# இசை ஆராய்ச்சி

''எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியராகப் பெறின்''

**ஆபிரகாம் பண்டிதர்** தமது வாழ்வின் பிற்காலத்தில் மிகுந்த ஆர்வத்துடன் இசைத்தமிழ் ஆராய்ச்சியில் ஈடுபட்டார். இசைத்தமிழ் ஆராய்ச்சியில் தமது உடல், பொருள், ஆவி அனைத்தையும் அவர் அர்ப்பணித்தார் என்று சொன்னால் அது மிகையாகாது. பண்டைத் தமிழ் நூல்களான தொல்காப்பியம், சிலப்பதிகாரம் போன்றவற்றில் இசைத் தமிழைப்பற்றிச் சொல்லப்பட்டவைகளையெல்லாம் அவர் ஆழ்ந்து படித்து, அவைகளைப்பற்றி பல நாட்கள் சிந்தித்துக் கொண்டிருந்தார். இசைத்தமிழின் ஆதாரம் எது? ஓர் இயக்கில் (ஸ்தாயியில்) உள்ள பன்னிரு சுரங்களையும் பழந்தமிழ் மக்கள் எவ்வாறு கண்டுபிடித்தனர்? ஓர் இயக்கில் உள்ள அலகுகள் (சுருதிகள்) எத்தனை? பூர்வ தமிழ் மக்கள் வழங்கி வந்த நுட்ப சுருதிகள் எவை? அவர்கள் பாடின பண்கள் எவை? அந்தப் பண்களின் இலக்கணம் என்ன? — இது போன்ற பல கேள்விகள் அவர் உள்ளத்தில் எழுந்தன. இவற்றிற்கெல்லாம் அவர் விடை காண முயன்றார்.

''அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்''

என்ற பொய்யாமொழிப் புலவரின் வாக்குப்படி இசை விற்பன்னர்களையும், தமிழ் அறிஞர்களையும் போற்றி, அவர்களின் நட்பைப் பெறுவதையே அரிய பேறாக அவர் எண்ணினார். அவர்களிடம் இசைத் தமிழ் பற்றிய உண்மைகளை விசாரித்து வந்தார்.

### ஏழு இசை மாநாடுகள்

இசைத்தமிழ் சம்பந்தமாக இசை ஆய்வாளர்கள், இசை விற்பன்னர்கள், மொழியியல் அறிஞர்கள் ஆகியோரின் கருத்துக்களைத் தெரிந்துகொள்வதற்காகவும், சுரங்கள் சுருதிகள் மற்றும் பண்கள் பற்றிய சந்தேகங்களை நிவர்த்தி செய்துகொள்வதற்காகவும், கலைகளில் சிறந்த இசைக்கலையை மேலும் அபிவிருத்தி செய்துகொள்வதற்காகவும், 1912-ம் ஆண்டு முதல் 1916-ம் ஆண்டு வரையிலான ஐந்து ஆண்டுக் காலத்தில் **"சங்கீத வித்தியா மகாஜன சங்கம்"** என்ற பெயரில் ஏழு இசை மாநாடுகளைத் தஞ்சையில் தம் சொந்தச் செலவில் அவர் நடத்தினார். மருத்துவத் துறையில் அவர் பெயரும் புகழும் பெற்று நிறையப் பொருள் ஈட்டியதால், இசை ஆய்வுப் பணிக்கென அவர் தாராளமாகச் செலவழிக்க முடிந்தது.

இந்த மாநாடுகளில் பரோடா திவான் திரு. V. P. மாதவராவ் C I. E., விஜயநகரம் சமஸ்தான வித்வான் திரு. வீணை வேங்கட ரமணதாஸ், மைசூர் வைணீக சிகாமணி திரு. சேஷண்ணா, திரு. எல். முத்தையா பாகவதர், வயலின் வித்வான் திரு. பஞ்சாபகேச பாகவதர், கும்பகோணம் திரு. ராதாகிருஷ்ண பாகவதர், திரு. A.G. பிச்சைமுத்து, B. A , L. T., கோவை திரு. P. S. சுந்தரமையர், சமஸ்கிருத பண்டிதர் திரு. எஸ். சுப்ரமணிய சாஸ்திரிகள், திரு. C. சப்தரிஷி பாகவதர், பூவனூர் திரு. பிரதாப ராமசாமி பாகவதர், தமிழ்ப் பண்டிதர் திரு. ஆர். சுப்ரமணிய ஐயர், மாயவரம் வீணை வித்வான் திரு. வைத்தியநாதய்யர் மற்றும் பல நூற்றுக்கணக்கான அறிஞர்களும், வித்வான்களும் கலந்துகொண்டு தங்கள் கருத்துக்களைத் தெரிவித்தனர். இசையின் பூர்வீகம் பற்றியும், ஓர் இயக்கில் (ஸ்தாயி) உள்ள சுரங்கள், சுருதிகள் பற்றியும் இசை சம்பந்தமான பல விஷயங்கள் பற்றியும் பல அறிஞர்கள் வியாசங்கள் படித்தனர். பல்வேறு ராகங்களின் லட்சணங்கள், பிரஸ்தாரங்கள், முதலியவை பற்றி இந்த மாநாடுகளில் விவாதித்து முடிவு எடுக்கப்பட்டது. ஒரு ஸ்தாயியில் உள்ள சுருதிகள் பற்றி வியாசங்கள் படித்தவர்கள் ஓர் இயக்கில் 22 சுருதிகள் உள்ளன என்று கூறினர்.

### சுருதிகள் பற்றிய ஆய்வு

இந்த மாநாடுகளில் இசை வல்லுநர்களும் ஆராய்ச்சியாளர்களும் அளித்த கருத்துக்களைக் கேட்ட ஆபிரகாம் பண்டிதர் ஓர் இயக்கில் உள்ள சுருதிகள் பற்றி மேலும் ஆராயத் துவங்கினார். சமஸ்கிருத

நூல்களாகிய சங்கீத ரத்ஞகரம் (சாரங்க தேவர் எழுதியது), சங்கீத பாரிஜாதம், ராகவிபோதம், சுரமேள கலாநிதி முதலியவைகளில் சுருதிகள் பற்றிச் சொல்லப்பட்டவைகளை ஆழ்ந்து படித்தார். இந்த நூல்களில் ஒரு ஸ்தாயியில் 22 சுருதிகள் உள்ளன என்று கூறப் பட்டுள்ளன. மற்றும் இசை அறிஞர்களான திரு. சகஸ்திரபுத்தி, திரு. E. கிளமென்ட்ஸ், திரு. ராஜா சுரேந்திர மோகன தாகூர், திரு. K. B. தேவால் ஆகியோர் சுருதிகளைப் பற்றிச் சொல்லியுள்ள கருத்துகளையும் படித்தறிந்தார். முத்தமிழில் ஒன்ருன இசைத்தமிழ் பற்றி, குறிப்பாகச் சுருதிகள் பற்றி சிலப்பதிகாரம் போன்ற பழந்தமிழ் நூல்களில் சொல்லப்பட்டவைகளையெல்லாம் படித்து ஆழ்ந்து சிந்தித்தார்.

பல ராகங்களில் நுட்ப சுருதிகள் வருவதைக் கவனித்த பண்டிதர் நம்முடைய இசை 12 சுரங்களிஞலோ அல்லது 22 சுருதிகளிஞலோ கட்டுப்படாது என்றும் 24, 48, 96 போன்ற நுட்ப சுருதிகள் கொண்ட தாக இருக்கவேண்டும் என்றும் எண்ணலானுர். இதுபற்றி அவர் மேலும் ஆராயலானுர்.

பூர்வ தமிழ் மக்கள் ஒரு ஸ்தாயியில் உள்ள 12 சுரங்களை, ச - ப முறையாகவும் ச - ம முறையாகவும், சுரஞானத்தைக் கொண்டு கண்டுபிடித்தார்கள். இவைகளில் கிரக சுரமாற்றிப் பல பண்களை உண்டாக்கி பூர்வ தமிழ் மக்கள் கானம் பண்ணி வந்தார்கள் என்றும் இதுவே ஆயப்பாலை முறையாகும் என்றும் பழந்தமிழ் நூல்களில் சொல்லப்பட்டுள்ளதை பண்டிதர் குறிப்பிட்டுள்ளார்.

இதன்பின் ஒரு ஸ்தாயியை 24 சுருதிகளாகப் பிரித்து, அவற்றில் ச - ப, ச - ம முறையில் வரும் இரண்டு சுரங்களில் ஒவ்வொரு சுருதி குறைத்து, 16 ஜாதிப் பண்கள் பாடிஞர்கள் என்று தெரிகிறது. இதுவே வட்டப்பாலை முறை என்று சொல்லப்படும். (24 சுருதிகள்)

இதன்மேல் ச - ப, ச - ம முறையில் வரும் பன்னிரண்டு சுரங் களில், அரை அரை அலகாக வகுத்துத் திரிகோணப்பாலையாகவும் (48 சுருதிகள்) கால் கால் அலகு வகுத்துச் சதுரப்பாலையாகவும் கானம் பண்ணியிருக்கிருர்கள். (96 சுருதிகள்)

ஆயப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலை ராகங் களில் சுருதி அலகுகள் குறைந்தும் கூடியும் வருவதைப் பண்டிதர் எல்லையற்ற பொறுமையுடன் கணித்து பல்வேறு அட்டவணைகளில் கருணமிர்த சாகரம் முதல் நூலில் நமக்கு அளித்துள்ளார்.

1916-ம் ஆண்டு மார்ச் மாதம் 20-ம் தேதி முதல் 24-ம் தேதி வரை பரோடாவில் நடைபெற்ற அகில இந்திய இசை மாநாட்டில் பண்டிதர் கலந்து கொண்டு ஒரு ஸ்தாயியில் 24 சுருதிகள் உள்ளன என்றும், பூர்வ தமிழ் மக்கள் 24, 48, 96 போன்ற நுட்ப சுருதிகளில் கானம் பண்ணினார்கள் என்றும் விவரித்தார். பண்டிதரின் குமாரத்திக ளான திருமதி மரகதவல்லி துரைப்பாண்டியனும் திருமதி கனகவல்லி நவமணியும் சில இராகங்களில் வரும் நுட்பமான சுருதிகளைப் பாடிக் காட்டினார்கள். இந்த மாநாட்டில் திருமதி மரகதவல்லி துரைப் பாண்டியன் ஒரு ஸ்தாயியிலுள்ள 24 ஸ்ருதிகளையும் சுருதி வீணையில் வாசித்துக் காண்பித்தும், வாய்ப்பாட்டாகப் பாடியும் காண்பித்தார். மாநாட்டிற்கு வந்திருந்த வித்வான்கள் அனைவரும் நுட்பமான இந்த சுருதிகளைக் கேட்டு வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தார்கள். இந்த மாநாட்டிற்கு வந்திருந்த விஜயநகரம் சமஸ்தான வித்வான் வைணீக சிரோன்மணி திரு. வேங்கடரமணதாஸ் கீழ்க்கண்டவாறு குறிப்பிட் டுள்ளார் ''.........ஒரு ஸ்தாயியில் 22 சுருதி என்ற மயக்கம் என்னை விட்டு நீங்கிற்று. அதோடு 12, 24, 48, 96 என்ற சுருதி முறையில் தனித்தனி பல கீர்த்தனங்கள் பாடி, திருஷ்டாந்தப்படுத்தினபோது நான் அடைந்த சந்தோஷத்திற்கு அளவில்லை............ நான் கன்னியாகுமரி முதல் இமயமலை வரையும் பல இடங்கள் சுற்றிப் பார்த்திருக்கிறேன், அனேக சங்கீத வித்வான்களோடும் சுரஞானிக ளோடும் பல நாள் பழகியிருக்கிறேன். ஆனால் திருமதி மரகதவல்லி அம்மாளைப் போல் நுட்ப சுரஞானமுடையவர்களை நான் பார்த்ததில்லை. நிலைப்படாத நுட்ப சுரங்களில் கார்வை கொடுத்து சொல்லிக் காட்டியதைப் பார்த்த சபையார் யாவரும் ஆனந்தமடைந்தார்கள். ஆனந்தத்தினால் கை கொட்டினார்கள்............''.

24 சுருதி முறையை வைணீக சிகாமணி வீணை சேஷண்ணா, எல். முத்தையா பாகவதர் போன்ற சிறந்த இசை அறிஞர்களும் பரோடா திவான் திரு. V. P. மாதவராவ் போன்ற ஆராய்ச்சியாளர் களும் ஏற்றுக் கொண்டு பாராட்டினார்கள்.

**கருணாமிர்த சாகரம் — முதல் புத்தகம்**

இசைத்தமிழ் பற்றி தாம் கண்டறிந்த உண்மைகளையும், பல ஆராய்ச்சியாளர்கள், அறிஞர்கள் ஆகியோரின் கருத்துகளையும், பழந் தமிழ் நூல்களில் சொல்லப்பட்ட அரிய விளக்கங்களையும் ஒருங்கே தொகுத்து, சுமார் ஏழு ஆண்டுகள் விடாமுயற்சியுடன் பாடுபட்டு

''கருணாமிர்த சாகரம் — முதல்புத்தகம்'' என்னும் இசைத்தமிழ் ஆராய்ச்சி நூலை 1917-ம் ஆண்டு ஆபிரகாம் பண்டிதர் வெளியிட்டார். இசை சம்பந்தமான பல அரிய உண்மைகளைக் கொண்ட இந்நூலை ஓர் ஒப்பற்ற இசைக் களஞ்சியம் என்று கூறலாம். சுமார் 1200 பக்கங்களைக் கொண்ட இந்நூல் நான்கு பாகங்களாலானது.

முதற்பாகத்தில் இசையின் சிறப்பு, இசையின் வழியாக இறைவனை வழிபடுதலின் மேன்மை, இசையின் பூர்வீகம் பற்றிய பல விளக்கங்கள், ஜலப்பிரளயத்தால் அழிவுண்ட தமிழ் நாடுகளும் கலைகளும் பற்றிய விவரங்கள், தென்னாட்டிலுள்ளோர் வழங்கி வந்த தமிழ் மொழியின் பூர்வீகமும் சிறப்பும், தமிழில் வடமொழி கலந்த வரலாறு, தமிழ் பல சிறந்த கலைகளையுடைய மொழியாக விளங்கின விவரம், தமிழ் மொழியே எல்லா மொழிகளுக்கும் தாய் மொழியாக இருந்திருக்க வேண்டுமென்பதற்குச் சில முக்கிய ஆதாரங்கள், தென் மதுரையிலும், கபாடபுரத்திலும் உத்தர மதுரையிலுமிருந்த மூன்று சங்கங்களைப் பற்றிய சில முக்கிய குறிப்புகள், முச்சங்கமிருந்த காலமும் அவைகளி லிருந்த புலவர்களும் அரசர்களும் அங்கு அரங்கேற்றிய நூல்கள், தலைச்சங்க காலத்தில் சங்கீதத்தின் உயர்நிலை பற்றிய உண்மை, பௌத்தரும் சமணரும் கலந்து இசையையும் நாடகத்தையும் தொலைத் ததும் அதனால் அழிந்துபோன நூல்கள் பற்றிய விவரங்கள், இசை யைப்பற்றிச் சொல்லும் பூர்வ தமிழ் நூல்கள், தமிழ்நாட்டின் செல்வம் மற்றும் நாகரீகம் பற்றிய தகவல்கள், முச்சங்கங்களின் காலத்தைப் பற்றிய விவரங்கள், சோழ மன்னர்களின் காலத்தில் தென்னிந்திய சங்கீதத்தில் தேர்ந்த வித்வ சிரோன்மணிகளின் பெயர்கள் மற்றும் அவர்களைப் பற்றிய முக்கிய குறிப்புகள், தஞ்சை சங்கீத வித்யா மகா ஜன சங்கம் கூட்டுவதற்கான காரணங்கள், இந்த சங்கத்தின் அங்கத் தினராய் இருந்தவர்களின் பட்டியல், இந்தச் சங்கத்தின் 6 மாநாடு களில் நடைபெற்ற இசை ஆய்வுப் பணிகள் பற்றிய விவரங்கள், முதலி யவை கொடுக்கப்பட்டுள்ளன.

இரண்டாவது பாகத்தில் சாரங்கதேவர் எழுதிய ''சங்கீத ரத்னா கரம்'' என்ற நூலில் ஓர் இயக்கில் (ஸ்தாயி) 22 சுருதிகள் உள்ளன என்று கூறியிருக்கும் விவரங்களும், சுருதிகள் பற்றி இசை ஆய்வாளர் களான திரு. ராஜா சுரேந்திர மோகன் தாகூர், திரு. K. B. தேவால், திரு. E. கிளமென்ட்ஸ், திரு. ராகோஜிராவ், திரு. பிரதாப ராமசாமி பாகவதர், திரு. S. மாணிக்கமுதலியார், திரு. சின்னச்சாமி முதலியார் சொல்லியுள்ள கருத்துக்களும், ''சங்கீத பாரிஜாதம்'' ''சதுர்தண்டிப் பிரகாசிகை,'' ''சுரமேளகளாநிதி'' போன்ற இசை நூல்களில் கூறப்

பட்டுள்ள விவரங்களும் பல்வேறு விளக்கங்களுடனும் அட்டவணைகளுடனும் கொடுக்கப்பட்டுள்ளன.

மூன்றாவது பாகத்தில் ஓர் இயக்கில் உள்ள சுருதிகள் பற்றிப் பண்டைத் தமிழ் நூல்களில் கூறப்பட்டவைகள், கிரகம் மாற்றும் முறையில் பிறக்கும் செம்பாலைப்பண் முதலிய பாலைப்பண்கள் பற்றிய குறிப்புகள், பழந்தமிழ் நாட்டில் வழங்கி வந்த பாலை, மருதம், குறிஞ்சி, நெய்தல் என்னும் நால்வகை யாழ்களைப் பற்றிய விவரங்கள் முதலியவை கொடுக்கப்பட்டுள்ளன. பழந்தமிழ் மக்கள் வழங்கி வந்த தாளங்கள், கையாண்ட யாழ்வகைகள், கொட்டும் கருவிகள், இராக ஆலாபனம் செய்யும் முறைகள், அபிநய முறைகள், அக்கால வழக்கிலிருந்த இராகங்கள், பிங்கல முனிவர் கூறியுள்ள 103 பண்கள், தேவாரததில் வழங்கி வந்த பண்கள், சங்கீத ரத்னாகரம், பரதர் நூல், சூடாமணி நிகண்டு, அரபந்த நாவலரின் பரத சாஸ்திரம் அபிதான சிந்தாமணி, பரிபாடல் முதலிய நூல்களில் கூறப்பட்டுள்ள இராகங்கள் பற்றிய குறிப்புகள் முதலியவை கூறப்பட்டுள்ளன. ஓர் இயக்கில் உள்ள 12 சுரங்களில், இணைச்சுரம், கிளைச்சுரம், நட்புச்சுரம் பகைச்சுரம் முதலியவை இன்னின்னவை என்ற விளக்கமும் இந்தப் பாகத்தில் அடங்கியுள்ளது.

பண்டிதர் மிகுந்த ஆராய்ச்சி செய்து 22 அலகுகள் (சுருதிகள்) ஓர் இயக்கில் பூர்த்தியடையாதென்றும், ஓர் இயக்கில் 24 அலகுகள் உள்ளன என்றும் பல்வேறு உதாரணங்களுடனும், ஆதாரங்களுடனும் இதில் விளக்கியிருக்கிறார்.

நான்காவது பாகத்தில் பூர்வ தமிழ் மக்கள் எவ்வாறு பலகலைகளிலும் தேர்ச்சி பெற்றிருந்தார்கள் என்பதற்கான ஆதாரங்கள், அவர்கள் வழங்கி வந்த யாழின் சிறப்புகள் முதலியவை கொடுக்கப்பட்டுள்ளன. தேவார திருவாசகங்கள் பாடப்பட்டுவந்த தமிழ்ப்பண்களும் அவைகளுக்குத் தற்காலம் வழங்கும் இராகங்களின் பெயர்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

ஆயப்பாலையில் உண்டாகும் 12 சுரங்களும், வட்டப்பாலையில் உண்டாகும் 24 சுருதிகளும், திரிகோணப்பாலை, சதுரப்பாலைகளில் உண்டாகும் 48, 96 நுட்ப சுருதிகளும் அவைகளின் அளவு பற்றிய கணிதக் குறிப்புகளும், அவைகள் எந்தெந்த ராகங்களில் வருகின்றன என்று விளக்கும் திருஷ்டாந்தங்களும் சொல்லப்பட்டுள்ளன.

இப்பாகத்தின் இறுதியில் பரோடாவில நடைபெற்ற அகிலஇந்திய இசை மாநாட்டில் நடந்த சுருதிகள் பற்றிய விசாரணையும், அந்தப்

பற்றிய குறிப்புகளும், தஞ்சை வித்யா மகாஜன சங்கத்தின் ஏழாவது மாநாட்டில் நடைபெற்ற சுருதிகளைப் பற்றிய விசாரணையும், பஞ்சாயத்தாருடைய தீர்மானமும் சொல்லப்பட்டுள்ளன.

மாகாணக் கல்லூரி தலைமைத் தமிழ்ப் பண்டிதர் மகாமகோபாத்தியாய டாக்டர் வே. சாமிநாதய்யர், தமிழ்ப் போதகாசிரியர் திரு. சி. ஆர். நமச்சிவாய முதலியார், தமிழ் லெக்சிகன் கமிட்டித் தலைமைப் பண்டிதர் திரு. இராகவையங்கார், திரு. வி. கலியாணசுந்தர முதலியார், திருக்கோயிலூர் ஆதினத்தலைவர் தவத்திரு. சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள், தவத்திரு. சிவஞானயோகிகள், தமிழ்த் தலைமைப் பண்டிதர் எல். உலகநாதபிள்ளை, மகாவித்துவான் கவிராஜ நெல்லையப்பபிள்ளை, காயகசிகாமணி எல். முத்தையா பாகவதர் ஆகியோரும் மற்றும் பல அறிஞர்களும் இசை வல்லுநர்களும் இந் நூலிற்கு மதிப்புரை வழங்கியுள்ளனர்.

## கருணாமிர்த சாகரம் — இரண்டாம் புத்தகம்

கருணாமிர்த சாகரம் - இரண்டாவது புத்தகம் நான்கு பாகங்களைக் கொண்டது. இந்தப்புத்தகத்தில் ராகங்களைப் பற்றிய முழுவிவரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

சரிகமபதநிச என்ற ஏழு சுரங்களும் சுருதியில் ஒன்றுக்கு மேல் ஒன்று உயர்ந்து கொண்டு போகின்றன. சுரங்கள் உயர்ந்து செல்லும் இந்த முறைக்கு ஆரோகணம் என்று பெயர். இதை ஆரோசை என்று அழைத்தார்கள். இதைப் போலவே சநிதபமகரிச என்று சுரங்கள் இறங்கி வரும் முறைக்கு அவரோகணம் என்று பெயர். இதை அமரோசை என்றும் குறிப்பிட்டனர். ஓர் இராகத்தைப் பற்றிய இலக்கணத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் அந்த ராகத்தில் என்னென்ன சுரங்கள் வருகின்றன என்றும், அந்த ராகத்தின் ஆரோகணம் என்ன, அவரோகணம் என்ன என்றும் தெரிந்து கொள்ள வேண்டும்.

ராகங்களில் இரண்டு பிரிவுகள் உள்ளன. ஒன்று சம்பூர்ணராகம். இதை மேளகர்த்தா ராகமென்றும், கர்த்தாராகம் என்றும் தாய் ராகம் என்றும் ஜனக ராகம் என்றும் அழைப்பார்கள். சம்பூர்ணராகத்தில் ஆரோகணத்திலும் அவரோகணத்திலும் ஏழு சுரங்களும் வரிசைக்கிரமமாக வரும். அதோடு கூட ஆரோகணத்தில் எந்தச் சுரங்கள் வருகின்றனவோ, அதே சுரங்கள் தான் அவரோகணத்திலும் வரும். இது போன்ற சம்பூர்ண இராகங்கள் அல்லது மேளகர்த்தா இராகங்கள் மொத்தம் 72 ஆகும்.

அடுத்தது ஜன்யராகமாகும். இது சம்பூர்ணஇராகத்திலிருந்து பிறந்த ராகமாகும். ஒவ்வொரு ஜன்ய ராகத்தின் சுரங்கள் அதன் ஜனக அல்லது தாய் ராகத்தின் சுரங்களாகவே இருக்கும்.

ஜன்ய ராகங்களில் மூன்று பிரிவுகள் உண்டு 1. வர்ஜராகங்கள். 2. வக்ரராகங்கள். 3. உபாங்க பாஷாங்க ராகங்கள்.

## 1. வர்ஜ ராகம்

வர்ஜ ராகங்களில் ஆரோகணத்திலாவது (ஆரோசை) அவரோகணத்திலாவது (அமரோசை) அல்லது இரண்டிலுமாவது ஒரு சுரம் அல்லது ஒன்றிற்கு மேற்பட்ட சுரங்கள் விலக்கப்பட்டிருக்கும். ஒருசுரம் விலக்கப்பட்டிருக்கும் ஆரோகண அவரோகணங்களுக்கு ஷாடவம் என்று பெயர். இரண்டு சுரங்கள் விலக்கப்பட்டிருக்கும் ஆரோகண அவரோகணங்களுக்கு ஔடவம் என்று பெயர். மூன்று சுரங்கள் விலக்கப்பட்டிருந்தால் அதற்குச் சுவராந்தரம் என்று பெயர். பழந்தமிழ் மக்கள் இதை முறையே பண்ணியற்றிறம் (6 சுரங்கள்) திறம் (5 சுரங்கள்) திறத்திறம் (4 சுரங்கள்) என்று அழைத்து வந்தனர். சம்பூர்ண, ஷாடவ, ஔடவ, சுவராந்தர பேதங்களினால் பல்வேறு வர்ஜராகங்கள் உண்டாகின்றன.

## 2. வக்ர ராகம்

ஆரோகணத்திலாவது அவரோகணத்திலாவது அல்லது இரண்டிலுமாவது சுரங்கள் கிரமமாகச் செல்லாமல் திரிந்து சென்றால் அப்படிப்பட்ட ராகத்திற்கு வக்ரராகம் என்று பெயர்.

## 3. உபாங்க, பாஷாங்க ராகங்கள்

மேள கர்த்தா ராகம் அல்லது தாய் ராகத்தில் வரும் சுரங்களையே எடுத்துக் கொள்ளும் ஜன்ய ராகங்களுக்கு உபாங்க ராகங்கள் என்று பெயர்.

சில ஜன்ய ராகங்களில் ரஞ்சகத்தின் பொருட்டு அந்நிய சுரங்கள், அதாவது அவைகளின் தாய் ராகத்தில் வராத சுரங்கள் வருகின்றன. இம்மாதிரி அந்நிய சுரங்கள் வரும் ராகங்களுக்குப் பாஷாங்க ராகங்கள் என்று பெயர்.

## ஜன்ய ராகங்களின் தொகை

கருணாமிர்த சாகரம் - இரண்டாம் புத்தகம் முதல் பாகத்தில் எவ்வாறு ஒரு சம்பூர்ண ராகத்தில், சம்பூரண, ஷாடவ, ஔடவ, வக்ர பேதங்களினால் 1,71,396 ராகங்கள் உண்டாகின்றன என்றும், 72 சம்பூரண ராகங்களுக்கும் மொத்தம் $1,71,396 \times 72 = 1,23,40,512$ ராகங்கள் கிடைக்கின்றன என்றும் பல்வேறு அட்டவணைகள் மூலம் பண்டிதர் விளக்கியிருக்கிறார்.

இந்த நூலின் இரண்டாவது பாகத்தில் பரம்பரையாய் வழங்கி வருகிற சில மேளகர்த்தா ராகங்கள் பற்றிச் சொல்லப்பட்டுள்ளது.

பூர்வ தமிழ் மக்கள் ஏழு சுரங்களைக் கிரகபேதம் செய்து செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப் பாலை, மேற்செம்பாலை ஆகிய பண்களைப் பாடினார்கள் என்றும், இவற்றின்ஜன்ய ராகங்களைப் பாடினார்கள் என்றும் சொல்லியிருக்கிறார். இதேபோல் பன்னிரண்டு சுரங்களைக் கிரகபேதம் செய்து பன்னிரு ராகங் களையும் அவற்றின் ஜன்ய ராகங்களையும் பாடினார்கள். பூர்வ தமிழ் மக்கள் ஒரு ஸ்தாயியில் வழங்கி வந்த நால்வகை யாழ் (கிராமம்) பற்றியும் பதினாறு சாதிப்பண்கள் பற்றியும், அவர்கள் பாடிவந்த 32 ராகங்கள் பற்றியும் இந்நூலில் விவரமாய் கொடுக்கப்பட்டுள்ளது.

இந்நூலின் மூன்றாவது பாகத்தில் 72 மேளகர்த்தா ராகங்கள், அவற்றில் பிறக்கும் ஜன்ய ராகங்கள், அவைகளின் ஆரோகண அவ ரோகண சுரங்கள் முதலியவை பிரசுரிக்கப்பட்டுள்ளன. மேலும், இந்த ராகங்கள் அகர முறையிலும், இன அகராதி முறையிலும் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன.

நான்காவது பாகத்தில் மேளகர்த்தா ராகங்களிலும், ஜன்னிய ராகங்களிலும் இன்னும் புதிதாக உண்டாகும் ராகங்களிலும் ஆரோ கண அவரோகண சுரங்களைத் தெரிந்து கீதம், கீர்த்தனம் முதலியன செய்யும் முறை (ஸ்புடம்) தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

## கீதம், கீர்த்தனம் முதலியவற்றிற்குப் பண் அமைக்கும் முறை

தியாகராஜ ஸ்வாமிகள், சியாமா சாஸ்திரிகள், முத்துச்சாமி தீட்சி தர் போன்ற பெரியோர்கள், சிறந்த இசை ஞானத்தாலும், இராகங் களைப் பலமுறை பாடிப்பாடிப் பெற்ற அனுபவத்தாலும், சிறந்த தெய்வ

பக்தியினுலும் நூற்றுக்கணக்கான கிருதிகளை இயற்றி, அவைகளை அழகிய இசைவடிவங்களில் அமைத்துள்ளார்கள். நடைமுறையில் நாம் பாடிவரும் பல இராகங்களிலும், பல அபூர்வ இராகங்களிலும், நாம் உண்டாக்கும் புதிய பல இராகங்களிலும் இசை அமைத்து கீர்த்தனங்கள் எழுதுவதற்கு ஆதாரமாக ஏதாவது ஒரு முறை இருக்கவேண்டுமென்று ஆபிரகாம் பண்டிதர் எண்ணினுர். இது பற்றி அவர் பல நாட்கள் சிந்தனையில் ஆழ்ந்தார். தாம் சிந்தித்த பல இசை வல்லுநர்களையும் அவர் இதுபற்றி விசாரித்தார். இதுபற்றிப் பத்திரிகைகளில் பிரசுரித்து இசை அறிஞர்களின் கருத்தைப் பெற விரும்பினுர். எந்த விதமான விவரமும் அவருக்குக் கிடைக்கவில்லை. இதுபற்றிக் ' கருணாமிர்த சாகரம்'' இரண்டாவது நூலில் அவர் இவ்வாறு கூறுகிருர்.

''ஓர் ஆரோகண அவரோகணத்தில் இராகசஞ்சாரம் எழுதவும் பண் அமைத்துக் கீதம் எழுதவும், கீர்த்தனம் எழுதவும் கூடிய முறை வந்தாலொழிய சங்கீத சாஸ்திரத்தின் முடிவைக் கண்டதாக எண்ணக் கூடாதென்ற அறிவு அடைந்தேன். பலமுகமாகப் பல சங்கீத வித்வான்களிடத்திலும் விசாரித்தேன். கீதம் எழுதும் முறை, இராகம் எழுதும் முறை தெரிந்தவர்கள் இருக்கிருர்களா என்று பல நாள் விசாரித்தேன். அவ்விஷயத்தில் எவ்விதமான துப்பும் சொல்லக் கூடியவர்களை நான் பார்க்கவில்லை. இராக சஞ்சாரத்திற்குச் சுருக்கம் எழுதுவதைப்பற்றி விசாரித்த பொழுது சிலர், '' இவருக்குச் சங்கீதப் பைத்தியம் பிடித்து விட்டது '' என்று பரிகாசம் செய்தார்கள். இப்படியிருக்கையில் மைசூர் வைணீக சிகாமணி திரு. சேஷண்ணு அவர்கள் தஞ்சைக்கு வந்தபோது, இவ்விஷயத்தைப்பற்றிப் பல குறிப்புகள் பேசிக்கொண்டிருந்தேன். அவர்கள் மற்ற யாவையும் ஒப்புக் கொண்டாலும் கீதம் எழுதும் முறையைக் கேட்ட மாத்திரத்தில், பரம்பரையாய்ச் சங்கீதத்திலேயே சீவனம் பண்ணும் எங்கள் ஞாபகத்திற்கு வராத அநேக காரியங்களைச் சொல்லுகிறீர்கள், அவைகள் நடக்கக் கூடிய காரியங்கள் என்று நான் நினைக்கவில்லை தாங்கள் வீண் சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டாம் '' என்று சொல்லிவிட்டு ரயிலுக்குப் போகும்போது, அவரோடு ஸ்டேஷனுக்குப் போய்க்கொண்டிருந்த பென்ஷன் டிப்டி போஸ்ட் மாஸ்டர், எனது சிநேகிதர் கிருஷ்ணசாமி ஐயரிடம் '' பண்டிதர் அவர்களுக்கு சங்கீதப் பைத்தியம் பிடிக்கும் போலத் தோன்றுகிறது. அவர் கேட்கிற கேள்விகளைப் பார்த்தால் ஆச்சரியமாகத் தோன்றுகிறது. ஆனுல் நியாயமாகவும் இருக்கிறது. வெயில் காலம் அதிகமாய் இருப்பதனுல், அதிக சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டாம் என்று நான் சொன்னதாகச் சொல்லுங்கள் ''

என்று சொல்லிப் போனார். இப்படிப் பல நாள் செல்லுகையில் ஒருநாள் அரிகேசவ நல்லூர் முத்தையா பாகவதர் அவர்களும், வீணை திரு. வெங்கடாசலம் ஐயர் அவர்களும் வீணை வாசித்துக் கொண்டிருந்த எனது மூத்த குமாரத்தி அன்ன பூரணியம்மாளும் நானும் சங்கீத விஷயமாய்ப் பேசிக் கொண்டிருந்த சமயத்தில் இராகங்களை உண்டாக்குவதற்கு உதவியான ஒரு முறை தெய்வாதீனமாய் என் மனதில் தோன்றியது. உடனே திரு. முத்தையா பாகவதர் அவர்களை எழுதும்படியாகக் கேட்டுக் கொள்ள, அம்முறைகளில் ஒன்றையும் விடாமல் பூரணமாய் எழுதினார்கள். திரு. வேங்கடாசலம் ஐயர் அவர்களாலும், திரு. முத்தையா பாகவதர் அவர்களாலும் எழுதப்பட்டவைகளில் சொல்லியிருக்கும் முறைப்படி இராகம் பாடிப்பார்த்து அவை மிகவும் சரியாயிருக்கின்றன என்று சந்தோஷமடைந்து, அம்முறையின் படி மற்றும் சில இராகங்களைச் செய்து பார்க்கையில், அவைகளும் சரியாயிருப்பதாக அனுபவத்தில் கண்டு அடைந்த சந்தோஷத்திற்கு அளவில்லை. '' இன்று தான் சங்கீதத்திற்கு உயிர் பிறந்தது, இந்த இடம் தான் சங்கீதம் பிறந்த இடம் '' என்று மிகவும் கொண்டாடினார்கள் .............. பின்பு மைசூரில் வைணீக சிகாமணி திரு. சேஷண்ணா அவர்கள் தஞ்சையில் என் வீட்டிற்கு வந்த சமயத்தில் கீதங்களைப் படித்துக் காட்டினேன். அவர்களும் பல இராகங்களுககுக் கீதம் படிக்கும்படிக் கேட்டு, அவைகள் முற்றிலும் சரியாயிருக்கின்றன என்று கொண்டாடினார்கள். பின்பு அவர்கள் ஒர் இராகத்திற்குச் சீவசுரம் இன்னதென்று தெரிந்தால் மாத்திரம் இவைகள் பிரயோஜனப்படும். இல்லையானால் படிப்பது கஷ்டமாகும். சீவசுரம் கண்டு பிடிக்கும் முறையிருந்தால், அப்போது மிகப் பிரயோஜனமாயிருக்கும் என்று சொன்னார்கள். அதையும் கண்டு பிடித்துச் சொல்லலாம் என்று பதில் சொன்னேன். அவர் உடனே ஓர் இராகத்தைச் சொல்லி அதற்குச் சீவசுரம் சொல்லும்படிக் கேட்டார். கணக்குப்பார்த்துச் சீவசுரம் இன்னதென்று ஒரு கடிதத்தில் குறித்து, அவர்களையும் குறிக்கும்படிச் சொல்லி, முடிவில் ஒத்துப் பார்த்துச் சந்தோஷமடைந்தாலும், திருப்தியடையாமல், இன்னொன்று இன்னொன்றாக ஏழு இராகங்களுக்குச் சீவசுரம் கேட்டு, அவைகள் யாவும் சரியாயிருக்கக் கண்டு, தீடீரென்று தான் எழுந்திருந்து, தன் இரு கைகளையும் குவித்துக் கொண்டு, இது மகான்களாலும் இராஜாக்களாலும் நடக்க வேண்டிய காரியம். இதைத் தாங்கள் சீக்கிரம் அச்சிட்டு எங்கள் கண்ணுள்ள பொழுதே கொடுக்கவேண்டும் என்று பகவானைப் பிரார்த்தித்துப் பிரியமொழிபல சொன்னார்கள். நானும் பிரதி நமஸ்காரம் செய்து தெய்வ கிருபைக்காக நன்றி பாராட்டினேன். ''

## இராகத்தின் முழுவடிவத்தைக் கண்டு பண் அமைத்தல்

குறிப்பிட்ட ஓர் இராகத்தின் முழு வடிவத்தைக் கண்டு அதில் கீதம் கீர்த்தனை முதலியவைகளுக்குப் பண் அமைக்கும் புதிய முறையைப் பண்டிதர் இசை உலகிற்கு அளித்துள்ளார். இந்த முறையை அவர் விளக்குகையில் ஒரு ஸ்தாயியிலுள்ள பன்னிரு சுரங்களையும் ஜோதிட சாத்திரத்தில் கூறப்பட்டுள்ள பன்னிரு இராசிகளுடன் ஒப்பிடுகிருர்.

பன்னிரு இராசிகளில் 3, 6, 8, 10 முதலிய ஸ்தானங்கள் பகை ஸ்தானங்கள் என்றும் 2, 4, 5, 7, 9, 11. 12 முதலிய ஸ்தானங்கள் சுப ஸ்தானங்கள் என்றும் ஜோதிட சாத்திரத்தில் சொல்லப்பட்டிருப்பது போலவே, ஒரு ஸ்தாயியிலுள்ள 2, 4, 5, 7, 9, 11, 12 ஸ்தானங்கள் நட்பு ஸ்தானங்கள் என்றும், 3, 6, 8, 10 ஸ்தானங்கள் பகை ஸ்தானங்கள் என்றும் கூறியிருக்கிருர். நாலாவது சுரமான அந்தர காந்தாரத்தை (க²) நட்புச் சுரமென்றும், ஐந்தாவது சுரமான சுத்த மத்திபத்தை (ம¹) கிளைச்சுரம் என்றும், ஏழாவது சுரமான பஞ்சமத்தை ( ப ) இணைச்சுரம் என்றும் கூறியிருக்கிருர்.

ஓர் இராகத்தின் முழு வடிவத்தையும் கண்டு அதில் கீதம், கீர்த்தனை எழுதுவதற்கு நட்பு, கிளை, இணைச்சுரங்கள் வரும் சுரத்தொடர்களை எழுத வேண்டும் என்றும், இம்முறையின் மூலம் ஒரு ராகத்தின் ஜீவ சுரத்தை எவ்வாறு கண்டு கொள்ளலாம் என்றும் பண்டிதர் விளக்கியுள்ளார். பலபுதிய இராகங்களிலும். அபூர்வ இராகங்களிலும் இசை அமைக்கும் திறமையை இம்முறைமூலம் எவரும் பெறலாம் என்று அவர் குறிப்பிட்டிருக்கிருர். பாடல்களுக்கு இசை அமைக்க அவசியமான விதிமுறைகளையும் பண்டிதர் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். இந்த முறையைப் பயன்படுத்தி பழக்கத்தில் இருக்கும் இராகங்களிலும் பல அபூர்வ இராகங்களிலும் சில புதிய இராகங்களிலும், இயற்றப்பட்ட கீதம், கீர்த்தனைகளும் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளன.

கருணாமிர்த சாகரம் இரண்டாம் புத்தகத்திற்கு மதிப்புரை வழங்கிய நீதிபதி திரு. M. அனந்த நாராயண ஐயர், M. A., I. C. S., அவர்கள் இந்த நூலில் குறிப்பிடப்பட்டுள்ள குறிப்புகள், விவரங்கள், விதிகள் முதலியவற்றைச் சங்கீத வித்வான்கள் ஆழ்ந்து கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டிருக்கிருர்.

அவர் இவ்வாறு கூறியிருக்கிறார். "........ இணை, கிளை, பகை, நட்பு என்பவைகளைப் பற்றிச் சிலப்பதிகாரம், கல்லாடம், தண்டியலங்காரம் முதலான் பண்டைத் தமிழ் நூல்களில் சொல்லப்படும் முறையை

அனுசரித்து யாவரும் அதனுல் பிரயோஜனமடையுமாறு இசை இலக்கணத்தைப் (ஸ்புடம்) பற்றிப் பண்டிதரவர்கள் இந்தப் புத்தகத்தில் தெளிவாகச் சொல்லியிருக்கிருர்கள் ......... ஒரே ஸ்வரஸ்தானம் ராகத்திற்குத் தக்கபடி தீவ்ரமாகவோ கோமளமாகவோ மாறுவது அநுபவப் பிரசித்தம். பல உதாரணங்கள் கூறலாம். வராளி, கைகவசி போன்ற ராகங்களில் பிரதி மத்திமம் தீவ்ரமாக ஒலிப்பதும் (வராளி மத்திமம் என்ற வழக்குச் சொல் காண்க), பியாகடையில் நிஷாத மத்திம ஸ்தானமும், ஆரபி சாமா போன்ற ஒத்த ராகங்களில் சதுச்ருதி ரிஷப ஸ்தான பேதத்தால் ராகச்சாயை மாறுவதும், மாயாமாளவ கௌளை கல்யாணி ராகங்களில் காக்லி நிஷாத ஸ்தானபேதமும் அனுபவத்தில் விளங்குவன. இவை விரிக்கின் பெருகும் ................. பன்னிரண்டு ஸ்வரங்களால் நமது சங்கீதம் ஒருநாளும் கட்டுப்படாது. ஏதோ ஒரு இசை இலக்கணத்தைக் கொண்டுதான், தியாகராஜர் போன்ற சங்கீத மஹான்கள் ஓர் ஆரோஹண அவரோஹணக் கிரமத்தில் ஒரு மிகச் சிறிய மாறுபாட்டாலும் புது சஞ்சாரங்களை நிர்ணயித்து, கீர்த்தனைகளை இயற்றியிருக்க வேண்டும்.

இப்பொழுது பிரசுரிக்கப்பட்டுள்ள இந்தக் ''கருணாமிர்த சாகரம்'' இரண்டாம் புத்தகம் இந்தப் பரம ரகசியத்தை உலக நன்மைக்காக வெளிப்படுத்த முன்வந்துள்ளது. இதில் வெளியிடப்பட்ட ஸ்புடம் முறை வேறெந்த நூலிலும் விவரிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. வித்வான்கள் முக்கியமாக இணை, கிளை, நட்பு, பகை (வாதி, சம்வாதி, அனுவாதி, விவாதி) ஸ்வரங்களின் உறவுகளையும், ஜீவசுரம், அமுத வைப்பு, பாடலமுதம் என்ற குறிப்புகளையும், ''ஸ்புடம் செய்யும் விதம் என்ற 272ம் பக்கத்திலுள்ள விதிகளையும் ஆழ்ந்து கவனிக்க வேண்டும். இறுதியில் மாயாமாளவகௌளை, வச்சிரகாந்தி (ஆபேரி) போன்ற பிரசித்த ராகங்களிலும், கனகாங்கி (1), தர்மவதி (59), பவப்ரியா (44) போன்ற அபூர்வமேளங்களிலும், நாகபூஷணி, கருணாகரி போன்ற அபூர்வ கிளை ராகங்களிலும், ஆனந்தரூபா, அபிராமம், ஞானப்பொன், சுந்தராங்கி போன்ற புது இராகங்களிலும் ஸ்புடத் தொடர்களும், கீதம் கீர்த்தனைகளும் இயற்றப்பட்டுள்ளன. இந்த நூலின் உயிர் நிலையான விஷயத்தின் அருமையையும் மேன்மையையும் கூறின் மிக விரியும்.

இந்த நூலில் காணப்படும் கீதம் கீர்த்தனை முதலியவைகளை இயற்றிய திருமதி மரகதவல்லி துரைப்பாண்டியன் அம்மையார் அவர்கள், தமது தந்தையார் காலத்திலேயே உயர் குருவினிடம் இசையில் தகுந்த சிட்சை பெற்று, நிச்சயமான நுட்ப சுருதிஞானமும்

இந்த ஸ்புட முறையைக் கையாளும் ஆற்றலும் அடைந்தவர். இதை நான் அனுபவத்தில் கண்ட பின்பே, இந்த முறையின் உயர்வு ஒரு வாறு எனக்குப் புலனாகியது,''

பண்டிதர் சுமார் பத்து ஆண்டுகட்கு மேலாகச் சுருதிகள் பற்றி தமிழ் வடமொழி தெலுங்கு முதலிய மொழிகளிலுள்ள நூல்களை யெல்லாம் ஆராய்ந்து, தாம் கண்ட உண்மைகளை அறிவித்திருக்கிறார். நம்முடைய இசை 22 சுருதிகளில் அடங்காது என்றும், 24, 48, 96 போன்ற நுட்ப சுருதிகள் கொண்டது என்றும், இந்த நுட்ப சுருதிகள் என்னென்ன ராகங்களில் எந்தெந்த அளவுகளில் வருகின்றன என்றும் விவரித்திருக்கிறார்.

சுருதிகளைப்பற்றி தாம் கண்டறிந்த உண்மைகளை அறிவித்தது மட்டுமல்லாமல், ஓர்இராகத்தின் இணை, கிளை, நட்பு சுரத் தொடர்களை தொகுத்தெழுதி, அந்த ராகத்தை ஸ்புடம் செய்து, அதன் ஜீவ சுரத்தைக் கண்டறிந்து, இசை அமைக்கும் ஒப்பற்ற முறையையும் இசை உலகிற்கு பண்டிதர் அளித்துள்ளார். இவைகள் இருபெரும் சாதனைகள் என்று பாராட்டத் தக்கவை அல்லவா?





1916-ம் ஆண்டு மார்ச் 20-ம் தேதி பரோடாவில் நடைபெற்ற அகில இந்திய இசை மாநாட்டில் கலந்து கொண்டவர்கள்.

# 7

# அருள்மறை ஆராய்ச்சி

''எப்பொருள் யார்யார்வாய் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு''

பண்டிதர் மருத்துவம், இசை, வேளாண்மை முதலிய துறைகளில் சிறந்து விளங்கினது போல, சமய ஆராய்ச்சியிலும் ஒப்பற்ற தொண்டு புரிந்துள்ளார். இந்திய நாட்டிற்கு ஏற்றவாறு கிறிஸ்துவ சமய உண்மைகளை எடுத்துரைக்க வேண்டுமென்ற ஆர்வம் கொண்டு, பல ஆண்டுகளாக சமயஆராய்ச்சி செய்து ''நன்மறை காட்டும் நன்னெறி'' என்னும் அரிய நூலை இயற்றியுள்ளார்.

**''நன்மறை காட்டும் நன்னெறி''**

கிறிஸ்தவம் அல்லாத மற்ற சமயத்தைச் சார்ந்தவர்களும் படித்துப் பயன்பெறும் நூல் இது என்று சொல்லலாம். கிறிஸ்தவ வேத நூலாகிய விவிலியநூலில் கூறப்பட்டுள்ள உண்மைகளைப் புதிய விளக்கங்களுடன் பண்டிதர் இந்நூலில் கூறியுள்ளார். வேத நூலின் கருத்துகளை விளக்கு வதால் இதை ஒரு சித்தாந்த நூல் என்றும், கிறிஸ்தவ ஒழுக்கத்தின் சிறப்பைக் கூறுவதால் இதை ஒரு ஒழுக்க நூல் எனவும், பக்தியின் முக்கியத்துவத்தை வலியுறுத்துவதால் இதை ஒரு பக்தி நூல் என்றும் கூறலாம்.

கிறிஸ்தவத் திருமறையை அவர் நன்மறை என்று குறிப்பிட்டுள் ளார். நன்மறையை அறிவதற்குக் கிறிஸ்து பரமான்மாவின் கிருபையே முதற் காரணமாய் இருக்கிறது. பரமான்மாவின் கிருபை இன்ன தென்றும், அதை எப்படி அடைவதென்றும் நன்மறை நமக்குக் காட்டு கிறது. நன்மறையின் உட்பொருளை அறிந்து அதன்படி நாம் நடப்பதே நமது முக்கிய கடமையாகும் என்று முகவுரையில் அவர் விளக்கியுள் ளார். நன்னெறி பற்றி அவர் சொல்லும்போது எங்குமுள்ள மெய்ப் பொருளை நாம் உடையவர்களாய் இருக்கிறேமென்று கண்டு அம்மெய

மாய் இருக்க வேண்டுமென்று வருந்தித் தீமையைவிட்டு நீங்குவதே நன்னெறியாம் என்று விவரித்துள்ளார். இந்நன்னெறிக்குப் பரமான் மாவே துணைவராக இருக்கிறார் என்றும் அவர் கூறுகிறார்.

**நன்னெறியின் நான்கு படிகள்**

இந்நூலின் ஆரம்பத்தில் பொதுக்குறிப்புகள் என்ற தலைப்பில் நன் னெறியின் நான்கு படிகளைப்பற்றி அவர் விளக்குகிறார்.

தன்னை அறிதல், தன்னை வெறுத்தல், தன்னைச் சுமத்தல், கிறிஸ்து பரமான்மாவைப் பின்பற்றல் ஆகியவைகளே இந்த நான்குபடிகளாகும்.

சீவான்மாவாகிய ஒருவன் தன்னை இன்னானென்றும், அதாவது தான் பரமாத்துமாவாகிய தெய்வத்தினுடைய பிள்ளையென்றும், தெய்வம் தனக்குள் இருக்கிறார் என்றும் அறிந்து கொள்ள வேண்டும். ஒருவன் தன்னை அறிந்தபின்தான் தனக்குத் தலைவனாகிய பரமான் மாவை இன்னாரென்று அறிவான்.

தன்னை வெறுத்தல் என்பது தன் பாவங்களையும் பாவசுபாவத்தை யும் வெறுத்தல் என்பதாகும்.

ஆசையால் விளையும் கெடுதல்களையும் துன்பங்களையும், சினத்தால் விளையும் தீமைகளையும் கேட்டையும் நன்றாக ஆய்ந்தறிந்து, அவை களைப் படிப்படியாக விட்டுவிடப் பழக வேண்டும்.

ஆண்டவருக்காக எந்த விதமான தியாகத்தைச் செய்யவும், கஷ்டங் களை அனுபவிக்கவும் நாம் தயங்கக் கூடாது. இதுதான் துன்பமாகிய சிலுவையைச் சுமத்தலாகும்.

ஒருவன் தன் அயலானுக்குத் துன்பமான காரியங்களை நினைக்காம லும், சொல்லாமலும், செய்யாமலும் இருக்கவேண்டும். பிறர் தனக்குச் செய்த தீமைகளை முற்றிலும் மறக்க வேண்டும். தீயவர்கள் தம்மைத் துன்புறுத்தி, சிலுவையில் ஆணிகளால் கடாவி, தாங்கமுடியாத வேதனை அளித்த போதும், ''பிதாவே இவர்களுக்கு மன்னியும். தாங்கள் செய்கிறது இன்னதென்று தெரியாமல் செய்கிறார்கள்'' என்று தமது பரம பிதாவிடம் அவர்களுக்காக வேண்டிய கிறிஸ்து பரமான்மாவைப் பின்பற்றுவதுதான் நான்காவது படியாகும்.

தன்னை அறிதல், வெறுத்தல், துன்பமாகிய சிலுவையைச் சுமத்தல், கிறிஸ்து பரமான்மாவைப் பின்பற்றல் அல்லது அவர் காட்டிய முன்மாதிரியின் படி எல்லாருக்கும் நன்மைசெய்தல், அவர்

கொடுத்த கற்பனைகளின் படி எல்லாரிடத்தும் அன்பாயிருத்தல் என்னும் நான்கு படிகளைக் கவனித்தோம் ''நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாய் இருக்கிறேன். என்னையல்லாமல் ஒருவனும் ஜீவனைக் கண்டடையான், சத்தியத்தைக் குறித்து சாட்சி கொடுக்கவே பிறந்தேன், சத்தியவான் எவனும் என் சத்தம் கேட்கிருன்'' என்று திருவாய் மலர்ந்தருளிய கிறிஸ்து பரமான்மாவை வாசகர்களாகிய நீங்கள் கண்டடைய வேண்டும் என்று பண்டிதர் வேண்டுகிருர். ''உங்களுக்குச் சமாதானம் உண்டாவதாக'' என்று சொன்ன கிறிஸ்து பரமான்மாவே உங்களுக்குப் போதிக்கட்டும். ''இன்றைக்கு இந்த வீட்டிற்கு ரட்சிப்பு வந்தது'' என்று சொன்ன அவரே உங்கள் உள்ளமாகிய வீட்டிற்கு வரட்டும். ''இதோ வாசற்படியிலிருந்து தட்டுகிறேன். எவனொருவன் என் சத்தத்தைக் கேட்டுக் கதவைத் திறக்கிருனே, அவனோடு நான் வீற்றிருந்து போஜனம் பண்ணுவேன்'' என்று சொன்ன பரமாத்மா உங்கள் உள்ளமாகிய வீட்டில் எப்போதும் இருக்கட்டும். நீங்கள் அறியாமல் செய்த குற்றங்களையெல்லாம் இரங்கி மன்னித்து, அவர் பேரால் நீங்கள் செய்த நன்மையாவற்றையும் நினைவு கூர்ந்து, அருளாலும் இரக்கத்தாலும் அவர் உங்களை முடிசூட்டுவார் என்றும், உங்கள் வாழ்க்கையை நன்மையால் நிரப்புவார் என்றும், ஆசிமொழிகளோடு பண்டிதர் கூறியிருக்கிருர்.

நன்மறை காட்டும் நன்னெறி நூலின் முதற்பங்கில் திருமறையியல் என்ற தலைப்பில் பல அரிய ஆன்மீக உண்மைகளை அவர் விளக்கியுள்ளார்.

முதலாவதாக சீவான்மா, கிறிஸ்து பரமான்மா, பிதா, பரிசுத்த ஆவி, அசுத்த ஆவி அல்லது பொல்லாத ஆவி ஆகியவைகளைப்பற்றி வேதவசன ஆதாரங்களோடு விளக்கியிருக்கிருர். அடுத்தபடியாக நம் உடல் தேவ ஆலயமாகவும், தேவ ராஜ்யமாகவும், ஜீவ விருட்சமாகவும், தெய்வ பர்வதமாகவும், தெய்வ சிங்காசனமாகவும் இருக்கிறதென்று சொல்லியிருக்கிருர்.

## நம் உடம்பு பரமான்மாவின் ஆலயமாயிருக்கிறது

நம் உடம்பு பரமான்மாவின் ஆலயமாய் இருக்கிறது என்னும் கருத்தை விளக்க ''பரமான்மாவும் உடம்பும்'' ''கடவுளும் உடம்பும்'' ''மண்கோவிலும் உடலும்'' போன்ற பல அத்தியாயங்கள் இந்நூலில் காணப்பெறுகின்றன.

கிறிஸ்தவ அடியார் புனித பவுல் நமது உடம்பைப்பற்றிச் சொல்லி யுள்ளதை பண்டிதர் மேற்கோளாகக் காட்டியுள்ளார். புனித பவுல் கீழ்க்கண்ட வசனங்களைக் கூறியுள்ளார்.

''நீங்கள் தேவனுடைய ஆலயமாயிருக்கிறீர்கள் என்றும், தேவனுடைய ஆவி உங்களில் வாசமாய் இருக்கிறார் என்றும் அறியாதிருக்கிறீர்களா?'' (I கொரி. 3:16)

''உங்கள் சரீரமானது நீங்கள் தேவனாலே பெற்றும் உங்களில் தங்கியுமிருக்கிற பரிசுத்த ஆவியினுடைய ஆலயமாய் இருக்கிறதென்றும், நீங்கள் உங்களுடையவர்கள் அல்லவென்றும் அறியீர்களா?'' (I கொரி. 6:18)

''நீங்களே கிறிஸ்துவின் சரீரமாயும், தனித்தனியே அவயவங்களாயும் இருக்கிறீர்கள் (I கொரி. 12:27)

''ஒருவன் தேவனுடைய ஆலயத்தைக் கெடுத்தால் அவனைத் தேவன் கெடுப்பார்; தேவனுடைய ஆலயம் பரிசுத்தமாய் இருக்கிறது. நீங்களே அந்த ஆலயம். (I கொரி. 3;17)

மேற்கண்ட வசனங்களிலிருந்து மனிதனுடைய உடம்பே தேவனுக்கு ஆலயமாய் இருக்கிறதென்னும், பிதா அதில் வாசமாய் இருக்கிறார் என்றும், பரமான்மா அதற்கு விளக்காய் இருக்கிறார் என்றும், சீவான்மா தெய்வத்திற்குப் பிள்ளையாய் இருக்கிறான் என்றும், அவனுடைய எல்லாத் துன்பங்களையும் அவர் நீக்குவார் என்றும், சீவான்மா அழிவற்ற ஜீவனைப் பெறுவான் என்றும் தெரிகிறது. பிதாவின் சித்தத்தை குமாரன் சீவான்மாவாகிய மனிதனுக்கு வெளிப்படுத்துவார் என்றும், பரிசுத்த ஆவி குமாரனுடைய சொற்களைச் சீவான்மாவிற்கு அடிக்கடி நினைப்பூட்டி வழி நடத்துவாரென்றும், மிகத்தெளிவாக பண்டிதர் இந்நூலில் விளக்கியிருக்கிறார். இவ்வுடம்பு பரமான்மாவிற்கு ஆலயமாய் இருப்பதால், எவ்வித அழிவும் உண்டாகாமல் இதனைப்பாதுகாத்து வளர்க்க வேண்டியது நமது கடமையாகும் என்று அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

திருமூலர் திருமந்திரத்தில் கூறிய பின்வரும் செய்யுளை நாம் ஒப்பு நோக்குவது அவசியமாகும்.

''உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண்டானென்
றுடம்பினை யானிருந் தோம்புகின் றேனே''

இவ்வுடல் தெய்வத்தின் பூந்தோட்டமாய் இருக்கிறதென்றும், தெய்வம் வசிக்கும் பரிசுத்தபர்வதமாய் இருக்கிறது என்றும் பண்டிதர் குறிப்பிட்டுள்ளார்.

நம்முடைய வளர்ச்சிக்குத் தூலம், சூக்குமம், காரணம் என்னும் மூன்று உடல்களும் நல்ல நிலையில் இருக்க வேண்டும். இதைப் பண்டிதர் தூய தமிழில் பருவுடல், நுண்ணுடல், கருவுடல், என்று குறிப்பிட்டுள்ளார். இந்த மூன்றும் நல்ல நிலையில் இல்லாவிட்டால், வீடில்லாத தலைவன் போலவும், தலைவனில்லாத வீடு போலவும், நெய் யற்ற திரிபோலவும், வெளிச்சமற்ற விளக்குபோலவும் இருப்போம் என்று கூறுகிறார். தூலம், சூக்குமம், காரணம் என்ற மூன்று தன்மை களையும் பொருந்தி நிற்கும் செயல், சொல், நினைப்பு என்ற மூன்றும் தூய்மையாக இருக்குமானால், அப்போது நல்வளர்ச்சியும் நல் வாழ்வு முண்டாகும்.

தன்னை அறிந்த சீவான்மாவைப் பர்வத புத்திரியாகவும், அவளுடைய சந்தேகத்தை நீக்கிவைக்க, பரமான்மாவைப் பற்றிச் சொல்லும் உண்மையான தேவபக்தனை நம்பியாராகவும் பண்டிதர் உவமித்துக் கூறியிருக்கிறார். பர்வத புத்திரி வேத ரகசியங்களை அறிந்து கொள்ள பல கேள்விகளைக் கேட்கிறாள். நம்பியார் அதற்குப் பதில் சொல்லுகிறார். இந்நூலை வாசிப்பவர்களுக்கு வேத விஷயங்களைத் தெரிந்து கொள்ள இந்தக்கேள்விகளும் பதில்களும் பெரிதும் பயன் படுகின்றன.

**சோதனைக்காரன்**

தீங்கனாகிய சோதனைக்காரன் சீவான்மாவை வசப்படுத்திக்கொள்ள முயற்சிக்கிறான். சீவான்மாவை மேல்நோக்க விடாமல் கீழ் நோக்கச் செய்வதே இந்தத் தீங்கனுடைய வேலை. பாதாளமே உருவாக எடுத்த இவன் மூன்று தீய குணங்கள் நிறைந்தவனாக இருக்கிறான். ஆணவம், காமம், மாயை என்ற மும்மலமும் ஓர் உருவாகி உலாவு கிறான். தூய உடம்பின் குற்றமாகிய அல்லது மலமாகிய 'நான் என்ற ஆணவத்தையும், சூக்கும உடலின் குற்றமாகிய தனக்கு என்று சொல்லும் இச்சையாகிய காமத்தையும், காரண உடலின் மலமாகிய அறியாமை என்னும் மாயையையும் தனக்கு உறுப்பாக உடையவன் இவன்.

இந்தச் சோதனைக்காரன் மன உறுதியுள்ள ஆதித்தந்தையி னிடத்தில் போகாமல், பேதையாகிய ஆதித்தாயைச் சோதித்தான். தேவ கட்டளையை மீறும்படியான ஆணவத்தை உண்டாக்கினான். தின்பதற்கு நல்ல கனி என்றும், பார்வைக்கு இன்பமான தென்றும் எண்ணும் படியாய், ஐம்புலன்களும் இச்சையில் அகப்படும்படித் தீய கனியைப்புகழ்ந்து பேசினான். பேதைப்பெண் இன்னதென்று தெரி யாமல் தியக்கமுற்றாள். நீங்கள் தெய்வத்தைப் போல் இருப்பீர்கள் என்று சொல்லி அறியாமைக்குள் அல்லது மாயைக்குள் கொண்டு வந்து விட்டான். அவளும் கனியைத் தின்றுதன் கணவனுக்கும் கொடுத்தாள். இறைவனுடைய ஆசீர்வாதத்தை ஆதி பெற்றோர் இழந்தனர். தகுதியில்லா சீவான்மாவைத் தகுதியுள்ளவன் ஆக்குவதற் காகவே கிறிஸ்து பரமான்மா இவ்வுலகிற்கு வந்தார்.

பர்வத புத்திரிக்குக் கிறிஸ்து பரமான்மாவின் பிறப்பு, வளர்ப்பு, ஞான தீட்சை, சோதனை முதலியவற்றைப்பற்றி நம்பியார் விளக்குகிறார்.

கிறிஸ்து பரமான்வைச் சோதனைக்காரன் சோதித்தது போல, உங்களையும் சோதிக்க வருவான் என்றும், அந்தச் சோதனைகளை நீங்கள் வென்று அவனைத் தோற்கடிக்க வேண்டும் என்றும், அப்பொழுது நித்திய ஜீவனைப் பெறுவீர்கள் என்றும் பண்டிதர் விளக்கியிருக்கிறார்.

நன்மறை காட்டும் நன்னெறியின் இரண்டாம் பங்கில், கிறிஸ்து பரமான்மா எவ்வாறு சோதனைக்காரனின் மூன்று சோதனைகளிலும் வெற்றி பெற்றார் என்று விரிவாக விவரிக்கப்பட்டுள்ளது. நான் என்ற ஆணவத்தை ஒழித்து கீழ்ப்படிதலையும் காருண்யத்தையும் கற்றுக்கொள்ள வேண்டியதின் அவசியம் வலியுறுத்தப் பட்டுள்ளது. தூய, சூக்கும, காரணமென்றும் மூன்று உடல்களைப் பற்றியும் அவைகளில் ஆணவம், காமம், மாயை என்னும் மூன்று தீய குணங்கள் உண்டாவது பற்றியும் இப்பகுதியில் விவரிக்கப்பட்டுள்ளது.

எல்லாச் சீவர்களுக்கும் இரங்கி நன்மையே செய்யும் காருண்யச் செயல்களையும், இரக்கமின்றிச் செய்யும் தீய செயல்களையும் நான் என்று அகங்கரித்துச் செய்யும் தீமைகளையும், அகந்தையற்று யாவருக்கும் கீழ்ப்படிந்து நடக்கும் உத்தம நன்னெறியையும் பற்றிப் பரமான்மாவும் அவரது அடியார்களும் சொல்லும் பல உண்மைகள் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளன.



# 8

# தொடரும்பணி

''வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்
மற்றைய எல்லாம் பிற''

இசையின் அடிப்படையாய் விளங்கும் அலகுகளைப் பற்றித் (சுருதிகள்) தாம் ஆராய்ந்து கண்ட உண்மைகள், பழந்தமிழ் மக்கள் வழங்கி வந்த இசைத்தமிழ் பற்றிய அரிய விவரங்கள், இராகத்தை ஸ்புடம் செய்து இசை அமைக்கும் முறை முதலியவைகளை இசை உலகிற்கு அறிவிக்க வேண்டும் என்ற பேரவாவால் பண்டிதர் தம் சொந்தச்செலவில் இசை ஆராய்ச்சி நூல்களை எழுதி வெளியிடும் பணியை மேற்கொண்டார். இது சம்பந்தமாக ஒரு சில இசை விற்பன்னர்கள் அவரை அதைரியப்படுத்திய போதிலும், அவைகளையெல்லாம் பண்டிதர் பொருட்படுத்தாமல் தமது பணியில் முழு மூச்சுடன் ஈடுபடலானார்.

அலகுகள் பற்றிய உண்மைகளையும், பழந்தமிழ் மக்களின் இசைச் செல்வத்தையும் விளக்கி, ''கருணாமிர்த சாகரம்'' - முதல்நூலை 1917-ம் ஆண்டு பண்டிதர் வெளியிட்டார். இதன்பின்பு இராகங்கள் பற்றிய முழுவிவரங்களையும், இராகத்தை ஸ்புடம் செய்து இசை அமைக்கும் முறை பற்றியும் எழுதி இவைகளைக்கருணாமிர்த சாகரம் - இரண்டாவது நூலில் வெளியிட எண்ணினார்.

கருணாமிர்த சாகரம் இரண்டாவது புத்தகத்தின் முதல் மூன்று பாகங்களையும் எழுதி சுமார் 256 பக்கங்கள் வரை பண்டிதர் அச்சிட்டு வைத்திருந்தார். முதல் பாகத்தில் எவ்வாறு ஒரு சம்பூரண இராகத்தில் பண்ணியல் (ஷாடவம்), திறம் (ஔடவம்), திறத்திறம் (சுராந்திரம்) போன்ற பேதங்களால் பல ஆயிரக்கணக்கான இராகங்கள்

உண்டாகின்றன என்று பண்டிதர் விளக்கியிருக்கிருர். இரண்டாவது பாகத்தில் மேளகர்த்தா இராகங்களைப்பற்றிய விவரங்களைக் கொடுத்திருக்கிருர். மூன்ருவது பாகத்தில் 72 மேளகர்த்தா இராகங்களில் பிறக்கும் கிளை இராகங்கள் பற்றிய விவரங்களைத் தொகுத்துத் தந்திருக்கிருர். மிகுந்த அக்கறையுடன் இராகங்களை மேளகர்த்தா முறையிலும், அகரமுறையிலும், இன அகராதி முறையிலும் தொகுத்து அளித்திருக்கிருர்.

இதன்பின்பு ஓர் இராகத்தின் ஆரோசை அமரோசை சுரங்களை வைத்து, அந்த இராகத்தை ஸ்புடம் செய்து, அதன் சீவசுரத்தைக் கண்டுபிடித்து இசை அமைத்து, கீதம், கீர்த்தனை, சுரஜதி, வர்ணம், முதலியவைகளை இயற்றும் முறையை இந்நூலின் நான்காவது பாகத்தில் வெளியிட எண்ணியிருந்தார். மேற்கொண்டு இப்பணியை முடிப்பதற்கு முன்பாக ஆபிரகாம் பண்டிதர் 1919ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 31ம் தேதி இறைவன் திருவடியை அடைந்து விட்டார்.

## இரண்டாவது நூல் வெளியீடு

''பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற''

அறிய வேண்டியவைகளை அறியும் நன் மக்களைப் பெறுவது பெறத்தகுந்த பேறு என்று தெய்வப்புலவர் குறிப்பிட்டது போல, பண்டிதரின் மக்கள் அவர் நிறைவேற்றக் கருதிய பணிகள் எல்லாவற்றையும் செய்து முடித்தார்கள். பண்டிதர் எழுதிவைத்திருந்த இசைக்குறிப்புக்களை வைத்து, இராக ஸ்புடமுறையை விளக்கி, அவரது குமாரத்தி திருமதி. மரகதவல்லி துரைப்பாண்டியன் கருணாமிர்த சாகரம் இரண்டாவது நூலின் நான்காவது பாகத்தை எழுதி முடித்தார். இந்தப் பணியில் திருமதி. மரகதவல்லியின் குமாரத்தி திருமதி. ஞானசெல்வம் தவப்பாண்டியன் தம் தாயாருடன் கூடவே இருந்து பல்வேறு இராகங்களின் இணை, கிளை, நட்பு சுரத்தொடர்களை எழுதி, ஸ்புடக் கணக்கைச் சரிபார்த்துக்கீர்த்தனைகளுக்கு இசை அமைக்கும் பணியில் பெரும் உதவி புரிந்தார். ஆபிரகாம் பண்டிதரின் மூத்த குமாரர் டாக்டர். ஆ. சுந்தரபாண்டியன் ''கருணாமிர்த சாகரம்'' இரண்டாவது நூலைத்தம் செலவில் அச்சிட்டு 1946-ம் ஆண்டு வெளியிட்டார்.

## மக்களின் பணி

டாக்டர் ஆ. சுந்தரபாண்டியன் தமது தந்தையைப் போலவே சித்த வைத்தியத் துறையில் நீண்டகாலம் ஆராய்ச்சி செய்து சூடச்சுன்னம், கெந்தித்தைலம் போன்ற சிறந்த சித்தவைத்திய மருந்துகளைக் கண்டு

பிடித்தார். பல்வேறு சுன்னங்களையும், மாத்திரைகளையும், தைலங்களையும் அவர் தம் வாழ்நாள் முழுவதும் தயாரித்துக்கொண்டே இருந்தார். வேளாண்மைத் துறையிலும் அவர் தம் தந்தையைப் போலவே சிறந்து விளங்கினர். ஒட்டு மாங்கன்றுகள், பலாச்செடிகள் போன்ற பழச் செடிகளைத் தமது தோட்டத்தில் நட்டுவித்து அதை வளப்படுத்தினர். நெற்பயிர் சாகுபடியிலும் அவர் சிறந்து விளங்கினர்.

பண்டிதரின் குமாரர்களான திரு. ஜோதிபாண்டியன், திரு வரகுண பாண்டியன், திரு சௌந்தர பாண்டியன் ஆகியோர் தம் தந்தையைப் போலவே புகைப்படக்கலையில் சிறந்து விளங்கினர். திரு. ஜோதி பாண்டியன் புகைப்படக்கலையில் A. R. P. S. ( Associate of Royal Photographic Society ) என்ற சிறப்புப் பட்டத்தைப் பெற்றவர் ஆவார்.

பண்டிதரின் குமாரர்களும் குமாரத்திகளும் இசையில் நல்ல பயிற்சியும் தேர்ச்சியும் பெற்றிருந்தனர். மூத்த மகளான திருமதி அன்னபூர்ணவல்லி ஞானசிகாமணி அம்மையார் வீணை வாசிப்பதில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார். அவருடைய சகோதரிகளான திருமதி மரகதவல்லி துரைப்பாண்டியன் அம்மையாரும், திருமதி கனகவல்லி நவமணி அம்மையாரும் இசையில் சிறப்புப் பயிற்சி பெற்று தம் தந்தையின் இசை ஆய்வுப் பணிக்குப் பெரிதும் உதவி புரிந்தனர். திருமதி மரகதவல்லி துரைப்பாண்டியன் சுருதி வீணையின் உதவிகொண்டும், உதவி இல்லாமலும் ஓர் இயக்கில் உள்ள 24 சுருதிகளைப் பாடிக் காட்டும் திறமை பெற்றிருந்தார்.

பண்டிதரின் மூன்ருவது நான்காவது தலை முறையைச் சேர்ந்தவர்களில் பலர் அலோபதிக் மருத்துவத் துறையிலும், சித்தவைத்தியத் துறையிலும், இசைத்துறையிலும் இன்று சிறந்து விளங்குகின்றனர்.

## இணைச்சுர முறை

ஆபிரகாம் பண்டிதர் 1910-ம் ஆண்டு முதல் ஐரோப்பிய இசை பற்றியும் ஆராயத் தொடங்கினர். கருணாமிர்த சாகரம் முதல் புத்தகத்தில் ( 239-ம் பக்கம் முதல் 246-ம் பக்கம் வரை) நம் இசையில் மேனாட்டு இசையை ஒருங்கிணைக்கும் இணைச்சுர முறையைக் குறிப்பிட்டுள்ளார். கின்னரத்தில் (ஹார்மோனியம்) முதல் வெள்ளைக்கட்டையை ஆதார சுருதியாக வைத்து ஏழு வெள்ளைக்கட்டைகளை வாசிக்கும் போது தீர சங்கராபரணம் இராகத்தின் சுரங்கள் கிடைக்கின்றன. இவ்வாறு,

இரண்டாவது, மூன்ருவது, நான்காவது, ஐந்தாவது, ஆருவது, ஏழாவது, வெள்ளைக் கட்டைகளை ஆதார சுருதியாக வைத்து வாசிக்கும் போது முறையே கரகரப்பிரியா, அனுமத்தோடி, மேசகல்யாணி, அரிக்காம்போதி, நடபைரவி, பஞ்சமமில்லாத தோடி ஆகிய இராகங்கள் கிடைக்கின்றன. இந்த இராகங்களை ஆங்கில இசைக் குறியீடுகளுடன் இப்புத்தகத்தில் வெளியிட்டுள்ளார்.

நமது இசையின் நுட்ப சுருதிகளையும், இராக ஆலாபனையில் காண்பிக்கப்படும் நயங்களையும், குழைவுகளையும், கமகங்களையும், நுட்பமான தாள அமைப்புக்களையும் ஐரோப்பிய இசையில் காண்பிக்க இயலாதென்ருலும், எளிய மெட்டுகளில் அமைந்துள்ள கீதங்கள், முதலியவைகளில் இணைச்சுர முறையைப் புகுத்தி இசை அமைத்தால் கேட்பதற்கு மிகவும் இனிமையாக இருக்கும் என்பதைப் பண்டிதர் கண்டறிந்து, தமது நூலில் இதைக் குறிப்பிட்டுள்ளார். அக்காலத்தில் தஞ்சையில் ஐரோப்பிய இசையில் வல்லுநராக விளங்கிய திரு. ஏ. ஜி. பிச்சமுத்து, BA.LT; அவர்களுடன் சேர்ந்து பண்டிதர் இத்துறையில் மேலும் முயற்சிகளை மேற்கொண்டார். 1911-ம் ஆண்டு தம் பிள்ளைகளைக் கொண்டும் கோயில் பாடகரைக்கொண்டும் இணைச்சுர முறையில் முதல் முதலாவதாக தமிழ்ப்பாடல்களைப் படிக்க அவர் ஏற்பாடு செய்தார். அதுமுதல் இணைச்சுர முறையின் சிறப்பை நம் மக்கள் உணரத்தொடங்கிஞர்கள். இணைச்சுர முறையை நம் இசையில் முதல் முதலாவதாக அறிமுகப்படுத்தியவர் ஆபிரகாம் பண்டிதர் என்ருல் அது மிகையாகாது.

அவரது காலத்திற்குப்பின் அவருடைய இரண்டாவது குமாரர் டாக்டர் ஆ. ஜோதிபாண்டியன் தம் தந்தையின் வழியைப்பின்பற்றி சங்கராபரணம், ஸ்ரீராகம், கல்யாணி போன்ற பல இராகங்களில் அமைந்த பாடல்களுக்கு இணைச்சுர முறையைப் பயன்படுத்திஞர். பல வாத்தியங்களுடன் சேர்ந்து தாமும் பாடி இம் முறையைப் பிரபல்யமாக்கிஞர். இணைச்சுர முறையுடன் கூடிய பல பாடல்களை இசைத் தட்டில் வழங்கி இத்துறையில் ஒரு புதுமையை உண்டாக்கிஞர். இணைச்சுரக்குறியீடுகள் கொண்ட ''The nativity of Christ'' என்னும் அவர் இயற்றிய இசைநூலை சென்னை கிறிஸ்தவ இலக்கிய சங்கத்தார் வெளியிட்டுள்ளனர்.

டாக்டர் ஜோதிபாண்டியனின் காலத்திற்குப் பின்பு அவரது மூத்த சகோதரரின் குமாரர் டாக்டர் ஆ. சு. தவப்பாண்டியன் இணைச்சுர முறையைப் பயன்படுத்தி பல பாடல்களைப் பாடி வந்தார். பல கீர்த்

தனைகளுக்கு இணைச்சுரக் குறியீடுகளை எழுதியும், கோயில் ஆராதனை வழிபாட்டிற்கு இசை அமைத்தும் அவர் சிறந்த பணிபுரிந்துள்ளார். இப்பணியை அவரது குமாரர் திரு T. A. G. துரைப்பாண்டியன் இப்பொழுது தொடர்ந்து செய்து வருகிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

## பாணர் கைவழி எனப்படும் யாழ் நூல்

ஆபிரகாம் பண்டிதரின் மூன்றாவது குமாரர் டாக்டர் ஆ. வரகுண பாண்டியன் ''பாணர் கைவழி'' என்னும் சிறந்த இசை ஆய்வுநூலை இயற்றியுள்ளார். பண்டைத்தமிழ் நூல்களிலே சொல்லப்பட்ட பேரியாழ், மகரயாழ், மீனயாழ் செங்கோட்டியாழ் என்னும் நால்வகை யாழ்களுள் செங்கோட்டியாழே தற்காலத்து வீணையாகும் எனப்பல் வேறு ஆதாரங்களுடன் இந்நூலில் அவர் நிரூபித்திருக்கிறார். பத்துப் பாட்டு, சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய பழந்தமிழ் நூல்கள், ''சங்கீத ரத்னாகரம்'' என்ற வடமொழிநூல், தஞ்சை சரஸ்வதி மஹால் நூல்நிலையத்திலுள்ள ''மௌனதிகாரலட்சணம்'' '' தான நிகண்டு'' முதலிய ஏடுகள் ஆகியவற்றை ஊன்றிப்படித்து அவை களில் யாழ் பற்றிச் சொல்லப்பட்டவைகளையெல்லாம் நமக்கு அறிவித்திருக்கிறார். தமது ஆய்வின் விளைவாக யாழ்க் கருவியின் பதினெண் உறுப்புகளின் பெயர்கள் பண்டையத்தமிழ் நூல்களில் எவ்வெவ்விடங்களில் கூறப்பட்டுள்ளன என்பதைத் தெரியப்படுத்து கிறார். இவ்வுறுப்புகளின் தோற்றத்தையும் பல சித்திரங்கள்மூலம் நமக்குக் காண்பித்திருக்கிறார். நாம் தற்சமயம் பயன்படுத்தும் இசை சம்பந்தமான பலவடமொழிச் சொற்களுக்குச் சமமான பழந்தமிழ்ச் சொற்களை இந்நூலில் நமக்குத் தந்துள்ளார். இசை ஆய்வாளர் களுக்கும் இசை கற்கும் மாணவர்களுக்கும் இது மிகவும் பயன்படும் நூலாகும்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் பதிப்பித்துள்ள இந் நூலிற்கு, அண்ணாமலைப்பல்கலைக் கழகத்து இசைத்துறைத் தலைவர் திரு. சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை, சேலம் நகராண்மைக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் திரு. தேவநேயப்பாவாணர், யாழாசிரியர் திரு. காரைக்குடிசாம்பசிவஅய்யர், கவியரசு வேங்கடாசலம் பிள்ளை ஆகியோர் அணிந்துரை வழங்கியுள்ளனர்.

## அழியாப்புகழ்

''ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன்று இல்.''

உயர்ந்த புகழ் அல்லாமல் உலகத்தில் ஒப்பற்ற பொருளாக அழியாமல் நிலைநிற்க வல்லது வேறொன்றும் இல்லை என்று பொய்யில் புலவர் கூறியபடி, பண்டிதரின் பூதஉடல் மறைந்து விட்ட போதிலும், மருத்துவத் துறையிலும் இசைத் துறையிலும் அவர் புரிந்துள்ள ஒப்பற்ற தொண்டுகள் என்றும் அழியாப்புகழை அவருக்குத் தேடித் தந்துள்ளன.

இசை ஆய்வாளர்களும், வல்லுநர்களும் ஓர் இயக்கில் (ஸ்தாயி) உள்ள அலகுகள் (சுருதிகள்) எத்தனை என்பது பற்றி ஆராய்ந்து பார்த்து, ஆபிரகாம் பண்டிதர் அலகுகள் பற்றிக் கூறிய உண்மைகள் ஏற்றுக்கொள்ளக் கூடியனவா என்று சிந்திக்க வேண்டும். ஓர் இராகத்தின் ஆரோசை அமரோசையை வைத்து அதை ஸ்புடம் செய்து, அதன் சீவசுரத்தையும் முழுவடிவத்தையும் கண்டு, அந்த இராகத்தில் இசை அமைத்து, கீதம், கீர்த்தனம் முதலியவைகளை எழுதும் புதிய முறையைப் பண்டிதர் இசை உலகத்திற்கு அளித்துள்ளார். இசை ஆய்வாளர்களும் விற்பன்னர்களும் இந்த முறையைப் பயன்படுத்தி, நம் பழக்கத்திலுள்ள இராகங்களிலும், பல அபூர்வ இராகங்களிலும் புதிதாக உண்டாக்கப்பட்ட இராகங்களிலும் இசை அமைத்து கீதம், கீர்த்தனை முதலியவைகளை இயற்ற வேண்டும். இவ்வாறு பல பாடல்களை இயற்றி இறைவனைப் போற்றுவதுதான் இசை ஆராய்ச்சிக்கென தம்மை முற்றிலும் அர்ப்பணித்துக் கொண்ட ஆபிரகாம் பண்டிதருக்கு நாம் செலுத்தும் சிறந்த அஞ்சலியாகும்.

---

# இசைத்தமிழ் பற்றிய சில குறிப்புக்கள்.

**ஏழிசை :-**

குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்று பூர்வ தமிழ் மக்களால் வழங்கப்பட்டன. இவை தற்காலத்தில் சட்ஜம்(ச), ரிஷபம்(ரி), காந்தாரம்(க), மத்யமம்(ம), பஞ்சமம்(ப) தைவதம்(த) நிஷாதம்(நி) என்று வழங்கப்படுகின்றன.

**முத்தமிழ் :-**

இயல், இசை, நாடகமென்னும் மூவகைத்தமிழ்.

**பாலை :-**

பகுப்பு அல்லது வகை. அது ஆயப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலை என நான்கு வகைப்படும்.

**ஆயப்பாலை :-**

ஓர் இராசிவட்டத்தில் சப-சப முறையாக வலமுறையாக வரும் அரை அரையான பன்னிரு சுரங்களும், சம-சம வாக இடமுறையாய் வரும் பன்னிரு சுரங்களும், அவைகளில் கிரகமாற்றும் பொழுது உண்டாகும் செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற் செம்பாலை முதலிய ஏழு பாலைகளும் மற்றும் சிறுபாலைகளும் உண்டாகும் விதத்தைச் சொல்லும் முறை.

**வட்டப்பாலை :-**

ஓர் இராசி வட்டத்தில் சப சம முறையில் வரும் பன்னிரு அரைச் சுரங்களையும், இரண்டிரண்டு அலகாகப் பிரித்து 24 அலகுகளாக்கி, விளரி கைக்கிளையில் ஒவ்வொரு அலகு குறைத்துக் கமகமாய் வாசிக்கும் மருதம், குறிஞ்சி, நெய்தல், பாலை என்னும் நால்வகை யாழ்களையும், அவை ஒவ்வொன்றிலுண்டாகும் அகநிலை. புறநிலை, அருகியல், பெருகியல் போன்ற 16 ஜாதிப்பண்களையும் பற்றிச் சொல்லும் முறை.

**திரிகோணப்பாலை :-**

ஒவ்வொரு அலகில் கமகமாய்ப்பாடும் வட்டப்பாலை முறையைப் போல் ½ அலகு கமகமாய்ப்பாடும் முறை.

**சதுரப்பாலை :-**

திரிகோணப்பாலை முறையைப் போல் சப-சம முறையில் வரும் இரண்டு சுரங்களில் கால் கால் அலகு கமகமாய் வாசிக்கும் முறை.

**சுரம்**

சுரங்கள் ஏழு. சுரஸ்தானங்கள் பன்னிரெண்டு

**சுருதி**

பன்னிரு சுரங்களின் உட்பிரிவு அலகு என்று அழைக்கப் படுகிறது. இசைத்தமிழ் அதிநுட்ப சுருதிகள் உடையது. வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலை போன்ற பாலைகளில் 24, 48, 96 போன்ற நுட்பசுருதிகள் வரும் போதுதான் இசைத்தமிழ் சிறப்பான அழகுடன் விளங்குகிறது.

**ஸ்புடம் :-**

ஓர் இராகத்தின் ஆரோசை அமரோசை முதலியவைகளைக் கவனித்து, இணை, கிளை; நட்பு சுரத்தொடர்களையும், இணைக்கும் சுரங் களையும் எழுதி அதிலிருந்து கீதம், கீர்த்தனை முதலியவை இயற்று வதற்கு உதவியாயிருக்கும் இசை இலக்கண முறை.

**சீவசுரம் :-**

ஓர் இராகத்தின் ஆரோசை அமரோசை சுரங்கள் தெரிந்து, இணை, கிளை, நட்புப் பொருத்தமுள்ள தொடர்களை எழுதி, அதிக பாத்தியதையுள்ள சுரத்தைக் கண்டு பிடிக்கும் போது அது சீவசுர மாகும்.

**இராகச்சாயை :-**

ஓர் இராகத்தை ஸ்புடம் செய்வதின் மூலம் கிடைக்கும் இணை, கிளை, நட்புச்சுரத் தொடர்களை எழுதி, இராக சஞ்சாரம், பாடிப் பார்த்தால் இராகச்சாயை கிடைக்கும்

**சுரப்படுத்துதல் :-**

ஒரு பாட்டிற்குச்சுரம் எழுதி அதன் கீழ் சாகித்தியத்தை ஒழுங்காய் எழுதி, தாள அட்சர கோடுகளுக்குள் அமைத்து, குறில் நெடில் இரண் டாம் மூன்றும் காலத்தைக் காட்டி எழுதுவது.

**சாகித்தியம் :-**

ஓர் இசைக்குப்பாட்டு எழுதுவது. இசையின் இராகபாவமறிந்து, அதற்கேற்ற பொருள் அமைத்து, குறில்நெடில் கவனித்து வல்லினம் மெல்லினம் தெரிந்து, வரப்பெரு எழுத்துக்கள் நீக்கி, அசை எதுகை மோனை முதலியவற்றுடன் எழுதப்படும் பாடல்கள்.

